ஸ்ரீ தத்தகிரி முருகன் மஹா கும்பாபிஷேக
ஞாபகார்த்த வெளியீடு 20-1-83

ௐ

# அதிஷ்டானமும் அவதூதர் மூவரும்



# புதுக்கோட்டை
# அதிஷ்டானமும் அவதூதர்
# மூவரும்

ஆசிரியர்:

கவிதாமணி
அ. வெ. ர. கிருஷ்ணசாமி ரெட்டியார்
திருச்சிராப்பள்ளி

வெளியீடு:

ஸ்ரீமத் ஸத்குரு ஸதாசிவ ப்ரம்மேந்த்ர
ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம்
புதுக்கோட்டை-622001.

# அஞ்சலியும் - ஆசியும்

புதுக்கோட்டை நகரம் புனிதர்களின் பாததூளிபட்ட புண்ணிய இடம். அழகான சாலைகள் அமைந்திருக்கும் நகரம். அன்னை பிரகதாம்பாளின் அருட்செங்கோல் நிலவும் நிலம். தெய்வீக நல்லருள் திகழும் திருநகரம்.

உயர்ந்த நீதிபதி பதவியைத் துறந்து, உலக வாழ்வில் அவதூதரான ஜட்ஜ் சுவாமிகள் என்று பக்தர்கள் போற்றும் ஸ்ரீமத் சதாசிவ ப்ரம்மேந்த்ர சரஸ்வதி அவதூத சுவாமிகள் அதிஷ்டானம் அமைந்திருக்கும் திவ்ய திருப்பதி புதுக்கோட்டை நகரம், புவனமெல்லாம் புரக்கும் அன்னை புவனேஸ்வரி திருக்கொலுவமர்ந்த திருத்தலம் புதுக்கோட்டை நகரமாகும்.

பொன்னி நதியின் நீர்வளத்தை புதுக்கோட்டை மாவட்டத்திற்குத் திருப்பி பொலிவு பெறச்செய்ய திட்டமிடும் சிந்தனையாளர்கள் இன்று புதுக்கோட்டையில் இருக்கிறார்கள்.

கோதாவரி நதி தீரத்திலே கருவுற்று, கிருஷ்ணா நதி தீரத்தில் முகிழ்ந்த அருட்ஞான ஜோதியை சென்ற நூற்றாண்டில் புதுக்கோட்டை நகருக்குக் கொணர்ந்து சேர்த்த அருள்ஞானச் செம்மல்கள் அன்றும் புதுக்கோட்டையில் இருந்திருக்கிறார்கள்.

நார்த்தாமலையில் தியான சமாதியில் இருந்த ஜட்ஜ் சுவாமிகளை தியானம் கலையாமல், பல்லக்கில் சுமந்து புதுக்கோட்டைக்குக் கொண்டுவந்து சேர்த்த மேலோர்களின் பொன்னடிகளுக்கு இன்று தலைதாழ்த்தி அஞ்சலி செலுத்துகின்றேன்.

யாரோ, எவரோ என்று அறியாதிருந்தபோது இவரே ஜட்ஜ் சுவாமிகள் என்று இனம் அறிந்து சகல ராஜமரியாதைகளுடன் அதிஷ்டானத்திற்கு ஏற்பாடுகள் செய்த அன்றைய

புதுக்கோட்டை சமஸ்தான திவான் வெங்கட்ராமதாச நாயுடு அவர்களின் தீர்க்கதிருஷ்டி நிறைந்த திருவுளத்திற்கும், புதுக்கோட்டை மன்னருக்கும் அஞ்சலி செலுத்துகின்றேன்.

ஜட்ஜ் சுவாமிகளின் அதிஷ்டானம் எங்கே அமைந்துள்ளது. என்பதை சிந்தித்து சிந்தித்து தீர்வு கண்ட நீதிபதி ஸ்ரீ பி. வி. ரகுநாதய்யர் அவர்களுக்கும் அதிஷ்டான இடத்தை கிரயம் பெற்றதும், அதன் உரிமையை விட்டுக் கொடுத்த நீதிபதி பத்மநாப சாஸ்திரிகள் குடும்பத்தாருக்கும் அஞ்சலி செலுத்துகின்றேன்.

சுமார் 40 வருடங்களுக்கு முன் எழுத்தாளனாக நான் மலர்ந்த சமயம், தன் சரிதத்தை எழுதும் அருட்பணியில் என்னை ஈடுபடுத்திய சேந்தமங்கலம் ஸ்ரீமத் சுயம்பிரகாச சரஸ்வதி சுவாமிகள் திருவடிகளுக்கு எனது அஞ்சலிகளை உரிமையாக்குகின்றேன்.

இந்தத் தொகுப்பில், புதுக்கோட்டை அதிஷ்டானத்தின் அருள்ஞான ஜோதியாக விளங்கும் ஸ்ரீமத் சதாசிவ ப்ரம்மேந்த்ர சரஸ்வதியவதூத ஸ்வாமிகள் வரலாறும் அதிஷ்டானம் அமைந்த வரலாறும் முதற்பகுதியாக அமைகின்றது.

இரண்டாவது பகுதியாக புதுக்கோட்டை நகரிலே அவதூதராகி சேந்தமங்கலம் தத்தகிரியில் அருட்சுடராகத் திகழும் சுயம்பிரகாச மாமுனிவர் வரலாறு 1942-ஆம் வருடம் நான் எழுதி வெளியிட்ட பகுதி அமைகிறது. சுவாமிகள் என் கைப்பிரதியைப் பார்வையிட்டு அங்கீகரித்த பின்னரே அன்று வெளியிடப்பட்டது, புதுக்கோட்டை அதிஷ்டானத்தைக் கண்டுபிடித்து அதனை உலகுக்கு அறிவித்த மகான் சுயம்பிரகாச மாமுனிவர் ஆகும்.

புதுக்கோட்டை அதிஷ்டானத்தை புகழ்உச்சிக்கு ஏற்றிய மகான், நடமாடும் புவனேஸ்வரி என்று நாட்டு மக்கள் போற்றும் ஞானி, வேதகால மகரிஷிகளைப் போல

புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் மகத்தான யாகங்களை யக்ஞங்களை இயற்றிவரும் மகரிஷி, ஸ்ரீலஸ்ரீ சாந்தானந்த சுவாமிகள் வரலாறு மூன்ருவது பகுதியாக அமைகிறது.

ஸ்ரீ சாந்தானந்தர் யார்? எந்த ஊர்? இயற்பெயர் என்ன? என்பது எவருக்கும் தெரியாது. பண்டைத் தொடர்பு காரணமாக பல்வேறு சமயங்களில் அவருடன் உரையாடும் போது சேகரித்த தகவல்களும் அவரையறியாது யான் சேர்த்த தகவல்களும் இப்பகுதியில் அடங்கும்.

ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகளின் சற்குருநாதர் அருட் கடாட்சத்திற்கு சின்னஞ்சிறு வயதிலே ஆட்பட்டவன் ஆனதினுல் ஞானகுரு புகழினை வகுத்துக் கூறும் நற்பேறு எனக்குக் கிட்டியுள்ள காரணத்தால் புதுக்கோட்டை அதிஷ்டானத் தொண்டர்களின் வரிசையில் எனக்கு முதல் இடம் கிடைத்திருக்கிறது என்பதை நினைத்துப் பெருமிதம் அடைகிறேன்.

ஸ்ரீ சாந்தானந்த சுவாமிகளின் சங்கல்பத்தால் புதுக் கோட்டை அதிஷ்டானமும், சேலம் ஸ்கந்தகிரியும் தமிழகத் தின் புனித ஸ்தலங்களாகத் திகழ்கின்றன. ஒரு ஜன்மாவில் சாதிக்க முடியாத காரியங்களை அவதூத துறவி, ஸ்ரீ சாந்தா னந்தர் சாதித்து முடித்து தக்க பாதுகாப்புகளும் செய்திருக்கிருர்.

சுவாமிகளின் அறுபது ஆண்டு நிறைவு விழா புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் 25–3–81ல் சிறப்பாக நடைபெறும் இத்தருணத்தில் குருகாணிக்கையாக இந்நூலை அதிஷ்டானத்தின் பீடத்தில் சமர்ப்பணம் செய்கிறேன்.

இந்த அற்புதமான நூல், முதற் பதிப்பை தமிழகத்தின் தவப்புதல்வர் புதுக்கோட்டை நகரம் பெற்றெடுத்த செம்மல், சிந்தையில் ஞானச்செல்வமும், செயல் திறத்தில் தெய்வ நம்பிக்கையும் கொண்டவரும், தமிழக அரசின் இந்து

அறநிலையத் துறை அமைச்சருமான மாண்புமிகு ஆர். எம். வீரப்பன் அவர்களின் ஆகிவரும் திருக்கரத்தால் 22—3—81 அன்று புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் வெளியிடப்படுவதும், புதுக்கோட்டை அதிஷ்டானத்திற்கு மணிமகுடம் சூட்டுவதுபோல அமைகிறது.

இந்நூலை வாங்கிப்படித்து மகிழும் தமிழினத்தார் அனைவரையும் வாழ்த்துகிறேன். சந்ததமும் செந்தமிழையே தெய்வமாக உபாசனை புரியும் என் சிந்தையில் அமர்ந்த தமிழ் வாணியை வேண்டிப் பணிகின்றேன். வாழ்க தமிழ் இனம், வளர்க ஞானச்செல்வம், ஓங்குக உயர்நீதி, உயர்க மானுடரின் மனம் என்றும் வாழ்த்தும்.

எழுத்தாளன் காரியாலயம்,
திருச்சி-2,
20—3—81.

அன்பன்
செந்தமிழ்த் தொண்டன்
**அ. வெ. ர. கிருஷ்ணசாமி**



புதுக்கோட்டை ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்
அவர்களின் பரமகுருவும்,
ஜட்ஜ் ஸ்வாமிகள் என்று பாராட்டப்படுபவருமான

**ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரம்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத**
**ஸ்வாமிகள் அவர்கள்**



உ

# ஜட்ஜ் சுவாமிகள் என்னும்
# ஸ்ரீலஸ்ரீ சதாசிவ ப்ரம்மேந்த்ரசரஸ்வதி சுவாமிகள் வரலாறு

ஓம் என்னும் உண்மை ஞானம் உயர்வுபெற, ஓங்கும் தவ வேள்வி பாங்குடன் திகழ, வேத வாழ்க்கை மேன்மை பெற, வியன் புகழ் தத்துவம், சித்தம் அமர, எங்கும் நிறைந்த இறைவனை, இதயத்தில் தேக்கிய எக்களிப்பால், எதையும் தாங்கும் இதயம் படைத்த ஞானியர் வாழும் பூமி பாரதம்.

ஆன்ம ஞானிகள், மலர்வதற்கென்றே, தோன்றிய ஞான பூமி, பாரதம், ஆதிமறை தோன்றிய நல்லாரிய நாடு, நீதி மறைவின்றி நிலைத்த திருநாடு, கண்ணனிருந்த கருணை நிலம். கீதாச்சார்யன் தோன்றிய கீர்த்திமிக்க குருநாடு பாரதம்.

மூன்று திசையிலும், கடல் சூழ, இமயம் எல்லையைக் காக்க எழுந்த திருநாடு. இனிய பொழில்கள் இணையிலா வளங்கள், ஓங்கிய மலைகள், பரந்த நீல நதிகள், ஒப்பற்ற இறைவன் ஆலயங்கள், ஓடிவரும் காற்றும் 'ஓம்' என்று உரைத்தபடி பாடி மகிழும் திருநாடு பாரதம்.

ஐம் பூதங்களால் ஆன இப்பிரபஞ்சத்தை, ஐம் பூதங் களால் ஆன தம் உடற்கூட்டிற்குள், ஆய்ந்து கண்ட

**மேலவர்கள், இவரோடும் கூடாமல் அந்தரங்க சேவை தந்த தெய்வ அருளே சிவம் என்றுணர்ந்து, தெளிந்த, நல்லறிஞர்** வாழும் திருநாடு பாரதம்.

பாரத நாட்டின் பகுதிகள் தோறும் ஞானமும்-கல்வியும் மோனமும்-தவமும், சத்தியமும்-தர்மமும், இல்லறமும், துறவறமும், வேள்வியும்-கர்மாக்களும், நல்லதும்-கெட்டதும் வீரமும்-தீரமும், அறிவும்-ஆற்றலும் மேவியிருந்தன. அண்டத்தின் ரகசியம் அத்தனையும், இந்தப்பிண்டத்தின் உள்ளே கண்டுமகிழ்ந்த அருந்தவச் செல்வர்கள், ஆங்காங்கு அவதரித்து அருள்புரிந்திருக்கிறார்கள்.

## ஆந்திர மாநிலம்

இந்தியத்தாயின் இதயமாக எண்ணரியப் புகழ்படைத்த பெருமையுடையது ஆந்திர மாநிலம். தேவரும் விரும்பும் தெலுங்கு மொழியில் சிறந்த நாடு. தியாகய்யர் இசைக்கு ஆதாரசுதியாக அமைந்தது ஆந்திரப் பிரதேசம்.

வடவேங்கடமும், மல்லிகார்ஜுன ஸ்ரீசைலமும், கண்ணப்பனுக்கு அருள்தந்து களித்த தென்கயிலேயான திருக்காளத்தியும படைத்த நாடு. கோதாவரியும், கிருஷ்ணுவும், துங்கபத்திராவும் தோன்றி வளம் கொழிக்கும் இனிய பிரதேசம் ஆந்திரம்.

விஜய நகர சாம்ராஜ்யத்தைத் தம் சொல்வலிமையால் நிறுவிய **வித்யாரண்யர்**, கீர்த்தியுடன் புகழ்கொண்ட **கிருஷ்ணதேவராயர்**, வினய சம்பத்தான வித்தகச் செயலினுலே, யாவரும் வியக்கும், அறிவுபடைத்த **தென்னுலிராமன்**, பெருங்கவிஞர் **போத்தன்ன**, தேசபக்த வீரர் **நாகேஸ்வரராவ் பந்துலு**, ஆகிய பெருமக்களின் அவதார ஸ்தலம் ஆந்திரப் பிரதேசம்: பக்தராமதாஸரும், பத்ராசலம் கோயிலும் படைத்தது ஆந்திரம்.

இன்றைய பாரத குடியரசுக்குள் சிறந்த நிலப்பரப்பை உடையது, விரிந்த நதிகளும், விளை நிலங்களும், விசாகப் பட்டிணம் துறைமுகம், கனிவளங்களும், கழனிகளும் இயற்கையாக அமையப் பெற்றது ஆந்திரப் பிரதேசமாகும்.

கவிச்சக்ரவர்த்தி கம்பநாட்டாழ்வார் புகழ்ந்து போற்றும் கோதாவரி நதி, போகிகளுக்குப் போகமும், யோகிகளுக்கு யோகமும் வழங்கும் புண்ணிய நதியாகும்.

## கோதாவரி தீரம்

யஜுர் வேதத்தின் தலைசிறந்த பகுதியான ஸ்ரீருத்ரத்தில் ''த்ரியம்பகம் யஜாமஹே ஸுகந்தம் புஷ்டிவர்த்தனம், உர்வா ருகமிவ பந்தனான் ம்ருத்யோர் முக்ஷீய மா அம்ருதாத்' இந்த மந்திரத்திற்கு விளக்கமாக விளங்குவது கோதாவரி நதி.

திரியம்பகம் என்று பெயர்கொண்ட மலையிலிருந்து இறங்கி இயற்கையான நறுமணம் நல்கி, தன்னைச் சார்ந்தவர்களுக்குக் கருணையால் அனைத்தும்ஈந்து, வெள்ளரிப்பழம், காம்பிலிருந்து விடுபடுவதுபோல சாவினுடைய பிடியிலிருந்து விடுபட உலகிற்கு வழிகாட்ட ஒரு சற்புத்திரனை உலகுக்கு ஈந்தது கோதாவரி நதி.

கோதாவரி நதிக்கரையில் கோதாவரி அணை இன்று கட்டப்பட்டிருக்கும் இடத்தில் ''தவளேசுவரம்'' என்ற திருத்தலம் இருந்தது. அத்தலத்தின் இறைவன் தவளேசுவரன். திரிபுர சம்ஹாரத்திற்கு ஸ்ரீ நாராயணனையே அம்பாகத் தரித்த சிவபெருமான் கோயில்கொண்ட திருப்பதி அது. தவளேசுவர மக்கள் ஆலயம் அமர்ந்த சிவபெருமானை தாயுமானவனாகப் போற்றினர்.

தவளேசுவரத்தில் சிறந்த வேதவிபுக்கள் வசித்து வந்தார்கள். அந்தணர்க்குரிய ஆறு கடமைகளில் நான்கை, நதிக்கரையிலும், இரண்டை இல்லத்திலும் தவறாது ஆற்றி

வந்த சான்றோர்கள். எதனை இழந்தாலும் மீண்டும் பெறலாம். வேத சம்பத்தை இழந்தால் மீண்டும் பெறலரிது என்பதை அறிந்த ஆன்றோர்கள் அவர்கள்.

அன்றாட வாழ்க்கையில்கூடத் தெரிந்தோ தெரியாமலோ, அறிந்தோ அறியாமலோ, இவர்கள் நெறி தவறினால் கூட அதற்கு மனம் வருந்தி பரிகாரம் செய்து பிழை பொறுக்கும்படி இறைவனைப் பிரார்த்திக்கும் அந்தணச் சான்றோர்கள் தவளேசுவரத்தில் வாழ்ந்தார்கள்.

தவளேசுவரத்தில் வாழ்ந்த அந்தணர்களுக்குள்ளே ஸ்ரீவேதமூர்த்தி சாஸ்திரிகள் குடும்பமும் ஒன்று. பக்த ராமதாஸின் திருப்பணி ஏற்ற பத்ராசலம் கோதண்ட ராம பிரானிடம் பக்திப் பரவசம் எய்தியவர். ஆத்ரேய கோத்திரத்தில் பிறந்தவர் அந்த அந்தணர். காசியில் வேதம் பயின்று அதன் பொருள் அறிந்த விபு. ஆந்திர மொழியான தெலுங்கும், சமஸ்கிருதமும் கற்ற பெரும் புலவர்.

## அவதாரம்

மழை வருவதற்கு முன்பே வானத்திலே ஒரு மாற்றம். ஆதவன் உதிக்கு முன்னே வைகறையில் ஒரு மாற்றம், குழந்தை பிறக்கு முன்னே மாதாவின் அங்கங்களிலே ஒரு மாற்றம். மகான்கள் பிறப்பதற்கு முன்னே மண்ணிலே ஒரு மாற்றம்.

புத்தர்பிரான்போல ஒரு புனிதர் தோன்றப் போகிறார்; மக்கள் இன நல்வாழ்வுக்காகத் தன் உயர்வைத் துறக்கும் ஒரு மகான் பிறக்கப் போகிறார். தியாக வாழ்வுக்கு ஒரு எல்லையான தீரர் பிறக்கப் போகிறார். கதிகலங்கி வருவோருக்குக் காலமெல்லாம் நல்லருள் சுரக்க ஞானக் கதிரவன் உதிக்கப் போகிறார். அருள்பார்வை தன்னால் அன்பர்களை ஆளத்தக்க அண்ணல் பிறக்கப் போகின்றார்.

தென்னகத்தில் யோக யோகியர்களுக்கெல்லாம் தலைமை தாங்கி ஞானப் பரம்பரை வளர்க்க ஞான பானு உதயமாகப் போகின்றார். ''புணர்ந்த பாவமெல்லாம் பரிபூர்ணம் உணர்ந்த ஞானி; விழிபடவேண்டுமே'' என்பதை மக்கள் இனம் உணரவைக்கும் ஞானி, அவதூத சாம்ராட் அவதரிக்கப் போகின்றார். ஒன்றுமே வேண்டாது உலகனைத்தும் ஆளும் ஒப்பற்ற தவயோகி உதயமாகப் போகின்றார் என்பதை தவளேசுவரம் அறிந்தது.

ஆன்ம ஞான சாகரத்துள், தன்னை அடக்கி அனைத்து மக்களுக்கும் அருள் வழங்க அண்ணல் உதிக்க தவளேசுவரம் கோதாவரி நீர்த்தேக்கத்துக்குள் தன்னை மூழ்கடித்துக் கொண்டது.

கோதவரி நீர்த்தேக்கம் கட்டியபோது தவளேசுவரம் நீர்த்தேக்கத்துள் மறைந்து போயிற்று.

தவளேசுவரத்தில் வாழ்ந்த அந்தண மேலோர் பல்வேறு இடங்களுக்கு ஜீவனத்தை நாடிச் சென்றனர். வேதமூர்த்தி சாஸ்திரிகள் குடும்பம் தவளேசுவரத்தைவிட்டு கிருஷ்ணை நதி தீரத்திலுள்ள ''விசாகப்பட்டிணத்திற்குக் குடியேறியது.

வேத மூர்த்தி சாஸ்திரி தம்பதிகளுக்கு நல்ல சுப தினத்தில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. கண்டவர் வியக்கும் லட்சணங்களுடன் கருத்தைக் கவரும் பொலிவுடன் குழந்தை திகழ்ந்தது. கண்டவர்கள் கையெடுத்துத் தொழும்பேறும், காணாதவர்களும் கருதித் துதிக்கும் பேறும் பெற்றது இக்குழந்தை என்பதை, அன்னை அறிந்தாரில்லை. அவதூத மார்க்கத்திற்கு ஆச்சார்யனாக விளங்கப்போகும் அக்குழந்தைக்கு ஆடை அணிகலன்கள் சூட்டி மகிழ்ந்தாள் பெற்றெடுத்த பெருமாட்டி.

தந்தையார் வேதமூர்த்தி சாஸ்திரிகள் தனயன் ஜாதக விசேடத்தைப் பார்த்தார். ''பரிவ்ராஜக யோகம்'' தன் குமாரனுக்கு இருப்பதை அறிந்தார். சித்தப்புருடனொருவன் திட சங்கல்பம் பெறவே. தன் மகனாகவந்து அவதரித்திருக்கிறான் என்பதை அறிந்தார். ஸ்ரீராகவனைப் பெற்ற தசரதன் எந்த மகிழ்ச்சியும் பெருமிதமும் அடைந்தாரோ அந்த மகிழ்ச்சியை வேதமூர்த்தி சாஸ்திரிகள் மனத்திற்குள் அறிந்து அனுபவித்து ஆனந்தப்பட்டார்.

அக்ஷராப்யாஸம்

ஆத்மஞானியாகப் போகும் அந்தக் குழந்தைக்கு முறைப்படி அக்ஷராப்யாஸம் செய்துவைத்தனர். தெலுங்கும் வடமொழியும் சிறுவர் கற்றுத் தேர்வுபெற்றார், பூணூலும், அரைஞாண் கயிறும் பூட்டுத் தெறித்துவிடப்போகும் ஞான மூர்த்திக்கு வேதமூர்த்தி சாஸ்திரிகள் முறைப்படி உபநயனம் செய்வித்து மகிழ்ந்தார்.

ஞானக் குழந்தை ஆரம்பப் பாடசாலை பயின்று முடித்து, உயர்நிலைக் கல்வியை ஓதி முடித்து, கல்லூரிக் கல்வி பயிலக் காத்திருந்தது.

ஜாதக விசேடத்தைத் தன் மனத்தில் அறிந்து தன் மனைவிக்கும், மகனுக்கும் அறிவிக்காமல் காத்திருக்கும் அந்த மேலோர் வேத வேதாந்த சாஸ்திரக் கல்வியில் தன் குமாரன் தேர்ச்சி பெறவேண்டும் என்று விரும்பினார்.

தனயன் மனமோ, வேத சாஸ்திர விற்பன்னனாவதோடு ஆங்கிலக் கல்வியும் கற்று அதிலே தேர்ச்சியும் சிறப்பும்பெற விழைந்தது. தன் விருப்பத்தைத் தனயனுக்குத் தெரிவித்தார் தந்தை. அதனை மறுக்காமல் தன் மனத்தில் இருக்கும் எழுச்சியை எடுத்துரைத்தார் தனயன். ஆங்கிலம் படித்தாலும் ஆச்சாரம் விடமாட்டேன் என்று உறுதி கூறினார்.

அந்தக் காலத்தில் ஆந்திரப் பிரதேசம் தனியாக இல்லை. சென்னையுடன் சேர்ந்த பகுதியாகவே இருந்தது. ஆங்கிலக் கல்வி பயிலச் சென்னை நகருக்குச் செல்லவேண்டும் என்பதை தந்தையின் மனம் நோகாமல் தெரிவித்தார் தனயன்.

## சென்னைக் கல்லூரி

இறைவன் சித்தம் எவரறிவார்? ஏக புத்திரன் விருப்பத்திற்கு எதிரிடையாக நாம் ஏன் இருக்கவேண்டும்? விடா முயற்சியும், திட சித்தமும் படைத்த தனயனின் நல்வாழ்வில் தம்மாலானதை உதவுவதே தம் கடமை என அறிந்து வேத மூர்த்தி சாஸ்திரிகள் விசாகப்பட்டிணத்தைவிட்டுச் சென்னை திருவல்லிக்கேணியில் குடியேறினர்.

தனயன் கல்லூரி படித்து முடித்துச் சட்டக் கல்லூரியில் சேர்ந்து தேர்வு பெற்றார். தளர்ந்த வயதுடையராலும் சாஸ்திரிகள் மேடையில் ப்ரவசனம் செய்து தன் குமாரன் கல்வி கற்கப் போதுமான திரவியத்தைச் சேர்த்தார். தாம் அதுவரை அறியாத தமிழிலும் விளக்கம் காட்டித் தக்க புலமையும் பெற்றார்.

சட்டக் கல்லூரியில் தேர்ந்து, வழக்கறிஞராகப் பதிவு பெற்று சான்றோர் ஒருவரிடம் அனுபவம்பெற்று, தனித்து வழக்கறிஞர் தொழில் நடத்தத் தொடங்கினர் தனயன்.

## திருமணம்

குமரனுக்கேற்ற குமரியைத்தேடி திருமணம் புரிவித்து வேதமூர்த்தி சாஸ்திரிகள் தம்பதிகள் களித்தனர். இனி தங்கள் எஞ்சிய வாழ்வை விசுவேஸ்வரன் திருக்கோயில் கொண்ட, கங்கை உத்திர வாகினியாகச் செல்லும் காசியில் கழிக்கக் கருதி மைந்தரிடமும் மருகியிடமும் விடைபெற்றுக் காசிநகர்க்கேகினர்.

## சிறந்த வழக்கறிஞர்

புதிய வழக்கறிஞருக்கு நீதி மன்றத்தில் நல்ல பெயர். வருவாயைக் கருதி வழக்கை யேற்காமல் நீதியைக் கருதி வழக்கை யேற்கும் திறமை மிக்கவர் என்ற புகழ் வந்தது.

புகழ் வந்ததோடு புத்திர பாக்கியமும் கிடைத்தது. அன்புடைய இல்லத்துணைவியோடும், அருமைக் குமாரனோடும் அக மகிழ்ந்து வாழ்க்கை நடத்தினர்.

புகழ் வந்தபின், பொருளும் வந்தது. புதிய வீடும் தேடி வந்தது. ஒய்வு கிடைக்கும்போது உயர் சாஸ்திரங்களைக் கற்று உள்ளத்தில் கனலை ஏற்றிக்கொண்டிருந்தார். இருபது வருடங்கள் ஓடி மறைந்தன. இன்னொரு குமாரரும் பிறந்து வளர்ந்தார்.

## திருவிதாங்கூர் அழைப்பு

திருவிதாங்கூர் சுதேச மன்னர் ஆண்டுவந்த காலம். ஆங்கிலநாட்டரசு இந்தியாவை ஆண்டுவந்த போதும் திருவாங்கூர் ராஜ்யம் தனித்தன்மைபெற்று விளங்கியது. ஸ்ரீஅனந்தபதுமநாப சுவாமியே திருவிதாங்கூர் ராஜ்ஜியத்தின் சக்கரவர்த்தி, மன்னர் தெய்வத்தின் பிரதிநிதியாக இருந்து ராஜ்ய பாரம் நடத்தி வந்தார்.

ஸ்ரீஅனந்தபதுமநாப சுவாமி திருவீதி உலாவரும்போது மன்னர் தலையில் முடியும். திறந்த மார்பில் சேவக சின்னமும் கையில் வாளும் தாங்கி முன் நடந்து வந்த காலம்.

திருவிதாங்கூர் ராஜ்ஜியத்தின் உயர் நீதி மன்றப் பிரதம நீதிபதியை நியமிக்கவேண்டிய சந்தர்ப்பம் மன்னருக்கு வந்தது. தக்க ஒரு நீதிபதியை நியமிக்க மன்னர் விரும்பினர். சான்றோர்களை விசாரித்தார்.

சென்னையில் வழக்கறிஞராகப் பயிற்சிப்பெற்ற ஒருவர் அமைச்சருக்கு ஒரு தகவல் தந்தார். ஆந்திர மாநிலத்தைச் சார்ந்த ஒருவர் சென்னையில் மிகச் சிறந்த வழக்கறிஞராக இருபது வருடங்களுக்கு மேலாகத் தொழில் புரிந்து வருகின்றார். வட மொழியும், தெலுங்கும், தமிழும் அறிந்த வித்தகர் அவர், நியாயத்திற்குப் போராடும் தீரர் அவர். வேத சாஸ்திரங்களை நன்கு அறிந்த மேலவர் அவர். சிறந்த விஷ்ணு பக்தர். நல்லவருவாய் அவருக்கு வந்து கொண்டிருக்கிறது. அதனைவிட்டு ஊதியம் குறைந்த இவ் வேலைக்கு வருவாரோ மாட்டாரோ அறியேன். அவர் சம்மதித்தால் நம் நீதிமன்றம் அழியாப் புகழ் அடையும் என்று தெரிவித்தார்.

மன்னரும் அமைச்சரும் கலந்தார்கள், எந்த விதத்திலேனும் அவரைத் தலைமை நீதிபதியாக அடைந்தே தீருவது என்று முடிவும் செய்தனர். நீதிபதி நியமன உத்தரவை எடுத்தவுடனே அனுப்பினால் அவர் மறுத்தாலும் மறுத்துவிடலாம், எனவே நேரிடையாகத் தக்கார் ஒருவரை அனுப்பி சம்மதம்பெற்றபின்பு நியமன உத்தரவை அனுப்பலாம் என்று முடிவு செய்தனர்.

அந்நாளில் திருவிதாங்கூர் ராஜ்ஜியத்திலும் புதுக் கோட்டை சமஸ்தானத்திலும் நியாய சபைகளில் தரும சாஸ்திர உண்மைகளை விளக்கியுரைக்கும் திறம்படைத்தவர்களைத் தருமாதிகாரி எனக் கௌரவித்து அமர்த்துவது வழக்கம்.

திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் தருமாதிகாரியாக இருந்தவர் வேத சாஸ்திர விற்பன்னர், பன்மொழி அறிந்த பண்டிதர், நாவன்மை படைத்தவர், அவரையே தூதாக அனுப்பலாம் என்று முடிவு செய்தனர்.

### அருட்பிரசாதம்

தருமாதிகாரி, ஸ்ரீஅனந்தபத்மநாப ஸ்வாமி சன்னதியில் நின்று பிரார்த்தித்துக்கொண்டு. தேவனின் பிரசாதத்தோடு

சென்னைக்கு வந்து சேர்ந்தார். பிரபல வழக்கறிஞரைப் பெருஞ் செல்வம் ஈட்டிய சான்றோராக உயர் மனையில் இருக்கும் வேதமூர்த்தி என்ற ஞானச் செல்வரைக் கண்டு திருவிதாங்கூர் ஸ்ரீஅனந்தபத்மநாப ஸ்வாமி அருட்பிரசாதம் கொண்டு வந்திருப்பதாக அறிவித்தார்.

எழுந்து பக்தியுடன் பிரசாதம் பெற்றுக்கொள்ளும் போது, வாழ்த்துவதுபோலத் தாம் வந்த கருத்தையும் தெரிவித்துவிட்டார். தருமாதிகாரியின் தந்தையும், வேதமூர்த்தி சாஸ்திரிகளும் ஒரு சாலை மாணவர்களாகக் காசியில் வேதம் பயின்றவர்கள் என்பதையும் தெரிவித்து நேயத்தை ஏற்படுத்திய பின்னர், ஸ்ரீ அனந்தபத்மநாப சுவாமியின் ஆட்சித் தலைவராக மன்னர் இருக்கிறார். நீதித் தலைவராக தங்கள் சேவையை ஏற்க விரும்புகின்றார் என்பதையும் தெளிவாக அறிவித்தார்.

வருவாய் குறைந்ததும், மன்னரின் விருப்பத்தின்படி நீதி வழங்கும் நிர்ப்பந்தம் உடையதுமான இப்பொறுப்பை ஏற்கலாமா வேண்டாமா எனத்தாங்கள் சிந்திக்கவேண்டாம். மன்னர் பெருமான் வடமொழி அறிந்த வித்தகர். தருமத்தின் தன்மையை அறிந்தவர். நீதிபதிக்கு சுதந்திரம் உண்டு என்று அறிவித்தார்.

ஸ்ரீபத்மநாப சுவாமியின் பிரசாதத்தோடு வரும் பதவி தன் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனையாக அமையப் போகிறது என்பதை அவர் அறிவாரா? பதவிக் காலம் முடிந்ததும் நீதிபதி என்ற சொல்லுக்கு முன்னால், ''முன்னாள்'' என்ற சொல் இடம்பெற்றுவிடும். இவருடைய வாழ்க்கை அத்தகையது அல்ல. பிறவி எடுத்ததின் பயன் விளையப் போகிறது. முன்பு விதித்த குறிப்பை முறைப்படி அறிந்து அதிலே இட்டுச் செல்லும் விதி, இனி நமக்கு வேலை வந்து விட்டது என்று மகிழ்ந்தது.

## பிரதம நீதிபதியானூர்

திருவிதாங்கூர் மன்னர் அழைப்பை ஏற்று நீதித் துறையில் அனந்தபதுமநாபர் தொண்டனூகப் பணிபுரிய அண்ணல் இசைந்துவிட்டார். சுபதினம் ஒன்றில் நண்பர்கள் வழி அனுப்பிவைக்க மனைவியாரோடும் மக்கள் இருவரோடும் திருவிதாங்கூர் சென்றடைந்தார்.

மன்னர் பெருமான் நீதிபதியின் முகத்தோற்றத்தையும், ஆழ்ந்த அறிவுத் திறமையையும், ஒழுக்கத்தையும், கண்டு மகிழ்ந்தார். பதவியைக் குறிக்கும் பொற்கணையாழி தந்து கௌரவித்தார்.

புதிய நீதிபதி பொறுப்பேற்றதும் ''உலக வழக்கு, நூல் வழக்கு, நாட்டு வழக்கு, குலமுறை வழக்கு'' ஆகிய நான்கு முறைகளையும் ஆராய்ந்து நீதி வழங்கினூர். செல்வம், பதவி, முதலியவற்றல் மயங்காத தன்மை, உருவத்தால் வேறுபட்டாலும் உள்ளொளியால் ஒன்றுபட்டது மனித இனம். இதனை அறியாமலே வாதாடி வழக்காட வருகின்றூர்கள் நீதி மன்றங்களுக்கு என்பது அவரது நம்பிக்கை.

''இருளையே தேடித்திரியும் மனம் உள்ள மாக்களை, ஒளியைத்தேடும் வழிநோக்கி இயங்கச் செய்து, வாழ்க்கையில் வழக்காட வருகின்ற மனிதர்களை அவர் மன மயக்கம் போக்கி அருளைத்தேடி வாழும் புது வழியில் திருப்பிவிடுதலே தமது சேவை'' எனக்கருதினூர்.

## நூல் ஆசிரியர்

இவர் ஆறு வருட காலம் திருவிதாங்கூரில் பிரதம நீதிபதியாக இருந்திருக்கிறூர். மலையாள மொழியும், கன்னடமும் கற்றூர். நான்கு மொழிகளில் நூல் இயற்றும் திறமையும் பெற்றிருந்தார். வடமொழியிலும், தெலுங்கு மொழியினும், கன்னட மொழியிலும் நூல்கள் எழுத

அவற்றைத் திருவிதாங்கூர் மன்னர் வெளியிட்டிருப்பதாக அறியப்படுகிறது. என்ன நூல்கள் என்பதும் தெரியவில்லை.

இதுவரை செய்த முயற்சிகளில் இவரது இயற்பெயரும் அறிய இயலவில்லை என்பதை எழுதுவதற்கே நாணப்பட வேண்டியிருக்கிறது. நம் மக்களின் அவல நிலைக்கு இதனை விடச் சான்று என்னவேண்டும்?

## விதி சிரித்தது

நீதிபதியின்முன் ஒரு கொலை வழக்கு வந்தது. சந்தர்ப்பம் சாட்சியம் எல்லாம் ஒருவன்மீது குற்றம் சுமத்துகிறது. நீதிபதியின் மனத்தில் அவன் குற்றமற்றவன் என்றே படுகிறது. ஏழு நாட்கள் வழக்கின் இருதரத்து வாதங்களையும் நீதிபதி கேட்டார். சிந்தித்தார்.

குற்றவாளியாக நிறுத்தப்பட்ட நிரபராதிக்கு நாவன்மையும், சமயோஜிதமும் சட்ட நுணுக்கங்களில் தேர்ந்த அறிவும் படைத்த வழக்கறிஞர் கிடைக்காவிட்டால் அவன் தண்டனையிலிருந்து தப்பமுடியாது.

கொலை வழக்கின் தீர்ப்பை எழுதத் தொடங்கும்போது குற்றவாளியாக நிறுத்தப்பட்டவனின் தூய முகம் முன்னால் வந்து தெரிகிறது. அவனை நம்பி நிற்கும் மனைவி மக்களின் பரிதாப முகம் காட்சி தருகிறது. நெஞ்சம் கனக்கிறது. ''சட்டம் தூக்கிலிடு என்கிறது; தருமம் விடுதலைசெய் என்கிறது.''

நிரபராதி என்று என் உள்ளம் தெளிவாக எடுத்துக் காட்டினாலும், சட்டத்தின் பிடியில் உலவும் இப்பதவி எனக்கு எதற்கு? என் உயிர், குடும்பம் இவைகளை வாழ வைப்பதற்காகவா? குற்றவாளியாக வந்து நிற்பவன் நீதி யற்ற முறையில் தண்டிக்கப்பட, அவன் மனைவி மக்கள் அவனை இழப்பதைவிடத் தான் தன் மனைவி மக்களை இழப்பது சிறந்தது என்று முடிவு செய்தார்.

தனக்குரிய கடமையைச் செய்ய அஞ்சி ஓடுகிறுன் என்று உலகம் தூற்றும். பாதகமில்லே. சித்தக் குழப்பம் என்று நகைப்பார்கள். பாதகமில்லே. இல்லத்தில் சச்சரவு என்று இல்லாத ஒன்றைக் கட்டிச் சொல்வார்கள். சொல்லிக் கொண்டிருக்கட்டும். உடமை கடமை மறந்து, உடைய பரமனைத் தான் அடைய விரும்புகிறேன். எல்லாவற்றையும் இழந்தாலும் எதனை வாழ்க்கையில் இழக்கக்கூடாதோ அதனைத் தேடிப் போகின்றேன், என்று சிந்தித்தார்.

உலகு தொடங்கிய காலம் தொட்டு எந்த நாட்டிலும் இல்லாத முறையில் குற்றமற்ற ஒருவனைக் குற்றவாளி என்று தீர்ப்புக்கூற மறுத்து நீதிமன்றத்தை விட்டு எவரும் நீங்கியது இல்லே. நீதிமன்றத்தை மட்டுமல்ல, உயர்ந்த பதவி, ஒப்பற்ற மனைவி, அன்புடன் ஈன்று வளர்த்த மக்கள், அன்னை தந்தையர் அனைவரையும் விட்டுத் தன்னந்தனியாகக் கானகம் செல்ல உயர்நீதிபதி முடிவு செய்தார்.

ஆசனத்திலிருந்து எழுந்து வெளிநடந்தார். யாவரும் திகைத்தனர். ஏது செய்வது என மயங்கினர்; தெரு வீதியில் நடந்தார், ஊரைத் தாண்டினுர், உயர்ந்து வளர்ந்த காட்டிடையே பிரவேசம் ஆகிவிட்டார்.

மன்னர் செய்தி கேட்டுத் திகைத்தார். மனைவி மக்கள் உற்றூர் நண்பர்கள் அனைவரும் தேடினர். எவர் கண்களுக்கும் இவர் சிக்கவில்லே. கேட்டவர் வியந்தனர். மனம் வருந்தினர் அவருடன் பழகிய அனைவரும்.

எவரையும் எதிர்பாராமல் இழந்ததைச் சிந்தியாமல் பெருமான் புறப்பட்ட செய்தியைச் சிந்திக்கும்போது போதி மர நிழல் தேடி பெரிய அரச போகத்தையும், மனைவியையும் மகனையும் விட்டுப் பிரிந்து சென்ற புத்தர் பிரானை உவமிப்பதா? ரகுநந்தனன் இல்லாமல் அயோத்திக்குத்

திரும்பேன் என்று வழியும் கண்ணீரோடு உயர்த்திக் கூப்பிய கரங்களோடு ராகவன் சென்ற கானகம் நோக்கிச் செல்லும் பரதனை உவமிப்பதா!

உயர்நீதிபதி பதவியைத் துறந்து உற்ற தாரத்தையும் பெற்ற மக்களையும், வயது முதிர்ந்த தாய் தந்தையரையும் விட்டு எவனோ ஒருவன் தன்னால் மரண தண்டனை அடைந்து விடக்கூடாதே என்று கானகம்புக திருவிதாங்கூர் தெருவிலே கால் நடையாக, கட்டிய உடையோடு செல்லும் இந்தப் பெருமானை எப்படிப் புகழ்வேன்? உவமிக்க ஒண்ணாத ஒன்றை உவமிப்பது எங்ஙனம்? எதனைத் தேடி இவர் போகின்றார்?

## சற்குருவைத்தேடி

இழக்கத் தக்கது, இழக்கத் தகாதது என இருவகை உண்டு. எவ்வளவு போக போக்கியம் இருந்தாலும் மனைவி மக்கள் இருந்தாலும், அந்தகன் வரும் காலத்தில் அனைத்தையும் மனிதர் இழந்தே தீரவேண்டும்.

எதனை இழந்தாலும் இழக்கலாம், சர்வ உயிர் படைப்புக்களிலும், தன்னிலும் இறை உணர்வை எவரும் இழந்துவிடக் கூடாது. தான் அறியாவண்ணம் தன்னிலே மறைந்து தன்னை இயக்கும் ஒன்றை, பிறவி இருக்கும்போதே அறிந்து தெளியவேண்டும் என்ற இதயதாபத்தோடு எழுந்து போகின்றார் அவர்.

வெள்ளத்தில் வீழ்ந்தவன் கரையை நாடுவதுபோல, வெயிலடி பட்டவன் நிழலை நாடுவதுபோல, சூடுகண்ட பூனை பாலைப்பார்த்து ஓடுவதுபோல, துள்ளிவரும் நதி கடலை நோக்கி ஓடுவதுபோல, இந் நீதிமான் ஓடுகின்றார். ஒருவரும் அறியாமல் இருக்க உயர்ந்த காட்டுக்குள் ஓடுகிறார். கட்டுத்தறி விடுபட்டு ஓடும் யானையைப்போல் ஓடுகின்றார்.

அணிந்திருக்கும் உடையே அவரது ஆஸ்தி, நெஞ்சத்தில் நிலைத்த உணர்வே அவரது மூலதனம். தாயைப் பிரிந்த

கன்று தாயை நோக்கி ஓடுவதுபோல சற்குருநாதனைத்தேடி ஓடுகின்றார்.

அவர் அன்று தொடங்கிய யாத்திரை தமிழகத்திற்குப் பாக்கியமாகப் போகிறது என்பதை அன்றைய மக்கள் அறியவில்லை. யாரோ எவரோ என்று இருந்துவிட்டார்கள்.

சிலர் அழைத்து உவந்தளித்த அன்னத்தைப் புசித்தார். அதுவும் கிடைக்காதபோது பட்டினி கிடந்தார். கவலை அவருக்கில்லை. அவரை அழைத்துச் செல்லும் ஆண்டவனுக்கல்லவா அந்தக் கவலை? திருக்கோயில்கண்ட இடங்களில் நின்று பிரார்த்தித்தார். சித்த புருடர்கள் சமாதிகளைத் தேடி நின்று தொழுதார்.

திருமகளைத் தன் மனைவியாகக்கொண்ட திருமால் எதனைத்தேடி வராக அவதாரம் எடுத்து அலைந்தார்? அதனைத்தேடி அய்யன் புறப்பட்டார். திருநெல்வேலி, திருச்செந்தூர், மதுரை, திருச்சி, தஞ்சை, திருவாரூர், சிதம்பரம் ஆகிய க்ஷேத்திரங்களிலே தேடினார். மூர்த்தங்களைத் தொழுதார். எவரிடமும் பேசுவதில்லை. இன்னார் என்று இனம் காட்டவும் இல்லை. 'வடக்கு நோக்கிச் செல்' என்ற ஆணை தில்லையிலே கிடைத்தது. திருவண்ணாமலையைத் தொழுதார். அங்குத் தேடவேண்டியதைத் தேடினார். தொடர்ந்து யாத்திரை, காஞ்சியை நோக்கிப் புறப்பட்டார்.

தன்னிடம் இருக்கும் ஆன்மப்பொருளை சுட்டியும், தொட்டும் காட்டும், காட்டத்தக்க குருநாதனைத் தேடினார். க்ஷேத்திரங்கள்தோறும் தேடினார். காடுகளில் தேடினார். எளியவர்களான பரதேசிகளுடன் பரதேசியாக நின்று தேடினார்.

பசி என்பது என்ன என்பதையே அறியாத அவர், குளிர் மழை என்பது உயிரை எவ்வாறு தாக்கும் என்பதை

அறியாத அவர், பஞ்சணை மெத்தையில் உறங்கிய அவர், கூப்பிட்ட குரலுக்கு ஏவல் செய்ய ஆள் படை படைத்த அவர், தன்னந் தனியாக அனைத்தையும் தாங்கி மான அவமானம் துறந்து, சென்றதை நினைத்துச் சிந்தனை செய்யாமல் சித்தத்தில் சோர்வு அடையாது, சத்தியத்தைத் தேடி அலையும் தர்மாத்துமாவாக, தாயின் மடியாகிய பூமியில் தவழும் குழந்தையைப்போல் நடை பயின்றார். நீதிபதியாக விளங்கிய நேர்மையாளர்.

காஞ்சியம்பதியில் உள்ள ஆலயங்களில் தொழுதார். ஆதிசங்கர பீடத்தை அடிபணிந்து போற்றினார். குருவாய் வருவாய் என்று பிரார்த்தித்தார். ''குருவே பரமன் மகனே குகையில் வளரும் கனலே'' என்று அழைத்தார். ஸ்ரீவரத ராஜப் பெருமானை வணங்கி, ''உலகுவாழ கீதாச்சார்யனை பெருமானே! குறியைக் காட்டும் குருவை அருள்வாய்'' என்று போற்றினார். அகில உலகும் போற்றும் அன்னை காமாட்சியை அடிபணிந்து வேண்டினார். புன்முறுவல் பூத்தாள் அந்த அன்னை காமாட்சி.

இறைவனைக் காட்டும் குரு. இருளை ஓட்டும் குரு. அஞ்ஞானம் என்னும் திரையைத் தன்ஞானச் சிலா கையில் அகற்றிவைக்கும் குரு. அறிவொளி காட்டும் குரு. ஒளி காட்டி ஒலி காட்டும் குரு. உன் அகக்காட்டில் சஞ்சரிக்க வழிகாட்டும் குரு. உள்ளத்தில் உள்ளவனை உள்ளபடி காட்டும் குரு. அறிவோம் நன்றாக. ''குரு வாழ்க, குருவே துணை'' என்று ஆத்ம சாதகன் தன்னிலே தான் திளைக்க மூலதனம் தரும் குருவைத் தேடினார், வேண்டினார். இன்னும் அறியவேண்டியதை அறிவாய் என அன்னை காமாட்சி வழி காட்டக் காஞ்சியில் உள்ள உபநிடத மடம் வந்து சேர்ந்தார்.

சித்தர்களும், முத்தர்களும் தேடிவந்து தவம்புரியும் திருத்தலத்தில் வந்து, ''கண்ணெதிரே கண்ணப்பனுக்கு அருள் சுரந்த வள்ளலே, என் கண்களிக்க சற்குருநாதரைக் காட்டமாட்டாயா?'' என்று கதறி நின்றார்.

வடக்கிலிருந்து தென்கோடிவந்த இறைவன் தெற்கில் இருந்து வடக்கு நோக்கி ஓடிவந்த மைந்தனுக்குக் கருணை பாலிக்கத் திட்டமிட்டிருக்கவேண்டும். காலத்தை நோக்கிக் காத்திருந்த ஊழ். எந்த ஊழ் நீதிபதி ஆசனத்தை விட்டு நேர் வடக்காக அழைத்து வந்ததோ, அந்த ஊழ் புதிய பாதையில் இவரைத் திருப்பச் சித்தம் கொண்டது. இறைவன் திருவுள்ளம் எவர் அறிவார்?

## உபநிடத மடத்தில்

காஞ்சியில் உபநிடத மடம் ஒன்று உள்ளது. 108 உபநிடதங்களுக்கும் விரிவான உரை வகுத்த உபநிஷத் ப்ரம்மேந்த்ர ஸாஸ்வதி ஸ்வாமிகள் தோற்றுவித்த திருமடம் அது. அறிவை அறிவால் அறிய விரும்பும் சாதகர்களுக்கு ஆதரவுகாட்டி உதவிய திருமடத்தின் தலைவரைக் கண்டு தனக்கு வழிகாட்டித் துறவு நல்கவேண்டுமென வாய்விட்டுக் கேட்டார்.

எதிரே இருக்கும் சாதகனை அறிந்தார். பொலிவை நோக்கினார். உள்ளத்தில் இருக்கும் தாபத்தை அறிந்தார். இவருக்கு உபதேசம் செய்யக் காத்திருக்கும் மகானைக் கண்டார். இன்னும் கொஞ்சகாலம் ஆகவேண்டியிருப்பதையும் உணர்ந்தார். 'இதுவரை நீர் தேடிவந்த பொருளை இம்மடத்தில் இருந்து தேடுக' என்று உபநிட மடத்தின் குருபெருமான் கூறி, இருக்க இடமும் உண்ண உணவும் பூண ஆடையும் தந்து, 'கன்றைத்தேடி கபிலை காத்திருக்கிறது. கவலையை விடு' என்றார்.

வாதிப் பிரதிவாதி வழக்கறிஞர்களின் வாதங்களைக் கேட்டு மனத்தில் தேக்கியவர், சாட்சிகளின் வாக்குமூலங்களில் உண்மை எங்கே இருக்கிறது என்பதைத்தேடி ஆய்ந்த நீதிவான். உபநிடத மடத்து முனிவரின் உயர் போதனைகளை உள்ளத்தில் தேக்கினார். உபநிடத விரிவுரைகளில் உண்மைப் பொருளைத் தேடினார். தீர்ப்புக்கூறும் வாயால்

மடத்திற்கு வந்த துறவி அல்லாதவர்க்கு உண்மைப் பொருளைக் குரு ஆணையின்படி உற்றது கூறினார். கற்று உணர்ந்து உள் அடங்கவேண்டும் என்று காலம் நினைத்தது போலும்.

இருக்க இடம்தேடி எழுந்தோடி வந்தவர் இவரல்லர். இல்லற இன்பம் மறக்கப் பறந்தோடி வந்தவர் அல்லர். ஆதரிக்க ஆள் இன்றி ஆதரவுதேடி வந்தவர் அல்லர். எடுத்த பிறவியில் அரிய முயற்சியெடுத்து அறிய வேண்டியதை ஆசான் துணைகொண்டு அறிந்து, பயின்று உலகுக்கு வழங்கவந்த ஞானபுருடரை அன்புத்தளை ஐந்து வருடங்கள் கட்டிப் போட்டுவிட்டது.

வேத சாஸ்திரங்களிலே தேர்ச்சிபெற்று வித்தக தத்துவ நுட்பங்கள் உணர்ந்த பின்னர் சிறகு முளைத்த பறவையைப் போல காஞ்சியைவிட்டு காளத்தியை நோக்கிப் பறந்தார்.

## திருக்காளத்தியில்

திண்ணனின் அன்பில் திளைக்க, உன்னத பக்தியை உலகுக் கறிவிக்கக் கயிலையிலிருந்த பெருமான் பறந்துவந்து அமர்ந்த திருத்தலம் அது. தருமியின் பாடல் தவறு என்று கூறிய செந்தமிழ் நக்கீரன் கயிலைபாதி-காளத்திபாதி பாடி இறைவன் சாபம் தீர்ந்து உடல் நோய் அகற்றிய திருத்தலம் அது. ஞானம்பிகை சமேதரராக இறைவன் திருக்கொலு அமர்ந்த திருத்தலம் திருக்காளத்தி க்ஷேத்திரம்.

திருக்கோயிலுக்குச் சற்றுத் தொலைவில் பரத்துவாசமா முனிவர் தவம்செய்து பலன்கண்ட பரத்துவாச குளக் கரையில் கன்றின் வரவை எதிர் நோக்கியவாறு பசு காத்திருக்கிறது.

தென்னகத்தில், ஸ்ரீதத்தாத்திரேயரான அவதூத ''முன்னவருக்கு'' ஆலயம் எழ, ஸ்வயம்ப்ரகாசருக்கு ஜோதி

காட்ட. புதுக்கோட்டை நகரில் புவனேச்வரித் தாய் பொற் கோயில் எழ, ஜட்ஜ் ஸ்வாமிகள் என பூலோகம் உள்ளளவும் போற்ற, தென்னகத்தில் அவதூத சாம்ராஜ்யத்தின் முடி சூடா மன்னருக்கு முடிசூட்ட, திருவிதாங்கூர் பிரதம நீதிபதி ஆசனத்திலிருந்து நேர் வடக்காய் ஓடிவந்த நேயருக்கு உள்ளத்தில உள்ளவனை அடைய தொட்டும் சுட்டியும் காட்டி உள்ளத்தில் உறங்கும் பாம்பினை உசுப்பி விட்டு ஓங்கார தத்துவத்தின் ரீங்கார நாதத்தை உள்ளத்துக் குள்ளே ஓலிக்கவைக்க ஸ்ரீராமகிருஷ்ண அவதூத மகராஜ் காத்திருந்தார்.

### சற்குரு தரிசனம்

மோன நிஷ்டை கூடிய ஞானமூர்த்தி அவர். பிரம்மத்தை உள்ளத்தில் தேடி அறிந்த ப்ரஹ்மேந்திரர். உள்ளத்தில் உள்ளவரிடம் உட்கலந்து உணர்ந்த பரமஞானி. காளகஸ்தி பரத்துவாச குளக்கரையில் குடில் அமைத்துக் காத்திருந்தார்.

ஸ்ரீஆதிசங்கரருக்கு உண்மை ஞானத்தைப் போதிக்க நர்மதை நதிக்கரையில் சிறு குடிலில் சீடனின் வரவை எதிர் பார்த்துக் காத்திருந்த ஸ்ரீ கோவிந்த பகவத்பாதரைப் போன்று, ஜட்ஜ் சுவாமிகள் என்று மக்கள் போற்ற இருக்கும் புனிதரின் வரவை நோக்கி அவதூத சற்குரு இராமகிருஷ்ண குருமகராஜ் காத்திருந்தார்.

குடிலின் முன்புறம் சுரக்குடுக்கை ஒன்று கட்டப்பட்டு இருக்கும். அன்பர்கள் அதிலே அன்னம் பாலிப்பார்கள், விருப்பம் வந்தால் வெளிவந்து அதனை எடுத்து உண்பார். இல்லையேல் அது அப்படியே இருக்கும் வருபவர்கள் அதனைச் சுத்தம் செய்து மறுபடியும் அன்னம் பாலித்து மகிழ்வார்கள்.

உட்ஜோதியில் கலந்த அந்த மகான் நிஷ்டை நீங்கி எழுந்து வெளியே வந்து சிறிது நேரம் எதையோ எதிர் பார்த்துக் காத்திருப்பார். அந்த நேரம் பார்த்து அடியார்கள்

அடிபணிந்து மகிழ்வார்கள், தரிசனம் காணக் குடிசையின் முன்புறம் கூட்டம் எப்போதும் இருக்கும். எவரிடமும் அவர் பேசுவதில்லை. கடைக்கண் வீச்சுப்படும் கருணை மட்டும் அவர் வழங்கும் அருட்பிரசாதம் என்று அன்பர்கள் மகிழ்வார்கள்.

இந்தத் திருச்சன்னதிக்கு நீதிபதி சுவாமி வந்து சேர்ந்தார். அருள் நோக்கும் அண்ணலைக் கண்டார். 'இவரே தன்னை ஆட்கொள்ள இருக்கும் அருட்குரு என்பதை அறிந்தார். ஆங்கிருந்தோர் பணிந்ததுபோல இவரும் பணிந்து நின்றார். என்ன? ஏது? என்று அவர் கேட்கவில்லை. குடிசைக்குள்ளே சென்றுவிட்டார்.

ஒரு வாரம் குடிசையின் முன்னால் காத்திருந்தார், நீதி மன்றம் துறந்து வந்த ஞானி. உள்ளத்தில் தாபமும், வேகமும் எழுந்தன. எப்பொழுது ஐயன் எழுந்து வந்து அருள்புரிவாரோ அப்பொழுது அதனை அடையவேண்டும் என்ற தாபத்தால் இரவு பகலாக ஊண் உறக்கமற்றுக் குடிலின் வாயிலில் காத்திருந்தார்.

உற்ற காலம் வந்தது. உள்ளே ஞான வேள்வி புரிந்து வந்த ஞான பானு, குடிசைக்கு வெளியே உதயமாயிற்று. இத்தனை நாள் எதனை எதிர்பார்த்துக் காத்திருந்தாரோ அது தன் குடிலுக்கு முன்பாக வந்து ஏழு நாட்களாகக் காத்திருக்கிறது. அருள்புரியும் பார்வை, அகத்தில் ஏற்றிய கனல், மோனத்தால் ஞான மூட்டிவிடும் முழு திடம் இவற்றுடன் வெளியே வந்தார் கன்றை எதிர்பார்க்கும் பசுவைப்போல.

நடு இரவில் சூரியன் உதயமானதுபோல ஞானபானுவின் வரவை அறிந்த சீடர் ஓடிவந்து அஞ்சலித்தார். மௌன விரதம் கலைந்து ''நாராயண நாராயண'' என்ற நாதம் அவதூத இராமகிருஷ்ண மகராஜ் வாயிலிருந்து ஒலித்தது.

கிடைத்த நேரத்தைப் பயன்படுத்திக் கிருதார்த்தனாக, தன் வரலாற்றை எடுத்தியம்பி, தனக்கு துறவறம் தந்து

உண்மை உணர்த்தவேண்டுமென, இறைவன் வடிவான குருவின் சன்னதியில் வினயத்துடன் விண்ணப்பித்து அடங்கி ஒடுங்கி நின்றார்.

மாதவ முனிவர், அன்பன் மனதறிந்தார். மாருத உளம் படைத்த வைராக்கிய சித்தமறிந்தார். நீ விரும்புவது யாது என்று குறிப்பால் கேட்டார். 'அமிருதத்வம்' அருள வேண்டுமெனப் பிரார்த்தித்து நிற்கும் அன்பருக்கு அருகழைத்துச் சுட்டிக்காட்டி, தொட்டுக்காட்டி, உபதேச மந்திரத்தை உச்சரிக்கும் உண்மையை உணர்த்தினார்.

## தீக்ஷாநாமம்

'அவதூத ஸந்யாஸ பரம்பரைக்கு ஆதிநாயகர் தத்தாத்ரேய முனிவர். அவ்வழியிலே மிகமிக உயர்வு பெற்றவர் சுகப் பிரம்மம். தென்னகத்தில் மும்மைக்குள் ஒருமை உணர்ந்த முத்த சிகாமணியாகிய ஸதாசிவப் பிரம்மத்தின் திருவருள் நின்பால் பொழியும். இன்றுமுதல் அவதூத ஆஸ்ரமம் ஏற்றுச் சதாசிவோம் என்ற தீக்ஷா நாமம் பெற்றுத் திகம்பரராய்த் தேசம் வலம் வந்து சிந்தை காட்டிய இடத்தில் நிஷ்டை கூடிப் பிரம்மேந்திரனாக விளங்குக'' என்று அருள் புரிந்து ஆசீர்வதித்து அவதூத நிலையும் அருள்புரிந்து 'நெருலூரில் நின்று பெறுக இன்னருள்' என்று கூறிச் சீடருக்குத் தவ வாழ்க்கை தொடங்க மூலதனம் வழங்கினார். ஆச்சார்ய புருஷன் முன்னிலையிலே அவதூதராகி, குருநாதன் புகன்ற மூல மந்திரம் அனுசந்திக்கும் நாவோடு அடிபணிந்து காளத்தியை விட்டுப் புதிய பிறப்பில் புதிய நடையை நெருலூர் நோக்கித் திரும்பினார் புதிய சதாசிவ அவதூதர்.

## ஸ்ரீஸதாசிவ அவதூதர்

உடுத்திய ஒரே உடையுடன், உற்றார் எவர் கண்களிலும் படாமல் காடு வனம் கடந்து, க்ஷேத்திரங்கள் தோறும் தேடி

அலைந்து, உபநிடத மடத்தில் நூலின் பொருள் அறிந்து, காளகஸ்தியில் உள்ளத்தில் உள்ளவனைக் குருமுகமாக அறிந்து, நான் நீ என்ற பேதமுமற்று, உடுத்தியிருந்த ஒரு ஆடையையும் உதறித் திகம்பரராக ஹம்ஸ: மந்திரத்தின் உட்பொருளைச் சிந்தித்தார்.

''வானில் பறக்கின்ற புள்ளெல்லாம் நான். மண்ணில் திரியும் விலங்கெல்லாம் நான். கானிழல் வளரும் மரம் எல்லாம் நான். காற்றும், புனலும், கடலுமே நான். மந்திரம் கோடி இயக்குவோன் நான். தந்திரம் கோடி சமைத்துள்ளோன் நான். சாஸ்திர வேதங்கள் சாற்றினேன் நான். நானெனும் பொய்யை நடத்துவோன் நான். ஞானச் சுடர் வானில் செல்லுவோன் நான். ஆன பொருள்கள் அனைத்திலும் ஒன்றாய் அறிவாய் விளங்கும் முதற்சோதி நான்'' என்ற நினைப்பில் தெற்கு நோக்கி விரைந்து வருகின்றார். குருநாதர் குறிப்பிட்ட நெரூரில் வந்து நிஷ்டை கூடிப் பரமகுருவின் இன்னருள் பெற்று இமயம் நோக்கி அவதூத யாத்திரை தொடர்ந்தார்.

திகம்பரர் நகரங்களை நாடாமல், காடு வனம் புகுந்து பசி எடுத்தபோது கிடைத்தவற்றை உண்டு, விருப்பும்—வெறுப்பும் பிறப்பது நாவின் அசைவினால் என்பதை அறிந்து மேற்பல்வரிசைக் கடியில் நாக்கை ஒட்டி, சிந்தை உட்குவிந்து கங்கைக் கரையும், இமயச் சாரலையும் சார்ந்து ஸ்ரீ தத்த சரண பாதுகை தரிசித்து, ஹரித்துவாரம் அடைந்து ரிஷிகேசத்தில் நிஷ்டையிருந்து ப்ரம்மேந்திரராக ஜட்ஜ் சுவாமிகள் தென்னாட்டை நோக்கித் திரும்பினார்.

ஆங்காங்கு பல அதிசயங்களைப் புரிந்துகொண்டு, அலை வாயிலில் அலையைப்போல, அன்னையின் மடியிலே தவழும் மதலையைப்போல, மணலிலே புரண்டு, பரமகுரு கால்பட்ட திருச்சீர் அலைவாயிலில் சிறிது நாள் தங்கிக் குற்றால அருவி குதித்துவரும் சிற்றருவியிலே திளைத்துச் செண்பக அடவியிலே தேறித் தெளிந்து, தேன் அருவியிலே அமுத தாரணை

பெற்று, ஐந்தருவி போன்று அருள்பொழிய ஆற்றல் அடைந்து தேன் அருவிக்கு மேலே அடர்ந்த வனத்தில் நெடு நாள் நிஷ்டையிருந்து மலையிறங்கிவரும் அருவிபோல மானாமதுரை வந்தடைந்தார்.

ஆதி சதாசிவ ப்ரம்மேந்திர அவதூத மகராஜ் ஐந்திடங்களிலே சமாதி அடைந்ததாகச் சதாசிவ அஷ்டகம் கூறும். நருமதை நதிக்கரையில் அமைந்த ஓங்கார க்ஷேத்திரம், வைகைக் கரையில் மானாமதுரை, காவிரிக் கரையில் நெரூர் கங்கைக் கரையில் காசி, சிந்துநதிக் கரையில் கராச்சி ஆகியவையாகும்.

நான்கு க்ஷேத்திரங்களில் ப்ரமகுரு அதிஷ்டானத்தில் அமர்ந்து தியான சமாதி நிஷ்டை கூடிய ஜட்ஜ் ஸ்வாமிகள் ஐந்தாவது சமாதி மானாமதுரையில் சிவாலயத்திற்கு பின்புறம் பிராகாரத்தில் ஒரு கல் தனியாக இருக்கிறது. அதனைச் சதாசிவ ப்ரம்மேந்திரர் சமாதி என்று ஆன்றோர் கூறுவர். தனிமை நாடியோ ஞான சந்தான வரவை எதிர்பார்த்தோ மானாமதுரையில் ஸ்ரீஜட்ஜ் ஸ்வாமிகள் என்று போற்றப் படும் ஸ்ரீஸதாசிவ ப்ரம்மேந்திரர் காத்திருந்தார்.

## நன்மாணாக்கர்

புதுக்கோட்டையைச் சார்ந்த கானம்பேட்டையென்கிற பிரஹ்மவித்யாபுரத்தில் அக்ரஹாரம் இருக்கிறது. அங்கு ஒரு வேத பாடசாலை. பாடசாலை உபாத்தியாயர்களாக நரசிம்ம கனபாடிகள் குருஸ்வாமி கனபாடிகள் என்ற இருவரும், அவர்களின் தாயாரும் அங்குவந்து குடியேறினார்கள்.

கனபாடிகளின் இளைய சகோதரர் கிருஷ்ணமூர்த்தி உத்யோகத்தை ராஜினாமா செய்துவிட்டுத் துறவியாகப் போகத் தமையன்மார்களிடமும், தாயாரிடமும் அனுமதி கேட்டுவந்தார். அன்பின் காரணமாக அவர்கள் அனுமதி கொடுக்க மறுத்தனர்.

கிருஷ்ணமூர்த்தி, மூன்று அல்லது ஆறு வீடுகளில் வஸ்திரத்தில் பிக்ஷை ஏற்று, தான் உண்டது போக எஞ்சியதைக் காக்கங்களுக்குத் தானம் செய்து வந்தார். இதனைக் கேட்டும், கண்டும் அவர்கள் மனம் வருந்தினார்கள், ஒரு சமயம் கிருஷ்ணமூர்த்தி கேட்டபோது குருவைத் தேடிவா அனுமதி தருகிறோம் என்று நரசிம்ம கனபாடிகள் தெரிவித்துவிட்டார். உள்ளூரில் தங்களுக்கு முன்பாகத் தங்கள் சகோதரன் பிக்ஷை ஏற்று வாழ்வதை அவர்கள் மனம் எவ்வாறு ஒப்பும்?

நண்பர்களின் பேச்சின் நடுவில் மானாமதுரையில் ஜட்ஜ் சுவாமிகள் இருக்கும் செய்தி அறிந்தார் கிருஷ்ணமூர்த்தி. கானம்பேட்டையை விட்டு மானாமதுரை வந்தடைந்தார். திருக்கோயில் மதில் அருகே மோனத்தவம் புரியும் திகம்பர சுவாமிகளைக் கண்டார். வீழ்ந்து அடிபணிந்து நின்றார். தம் அருள்தாபத்தை வினயமோடு தெரிவித்துத் துறவு நல்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்.

தமது ஞான சந்தானம் இவர்தான் என்று ஜட்ஜ் ஸ்வாமிகள் அறிந்தார். என்றாலும், இளையவனின் வேட்கையைப் பரிசோதிக்க, ஏதும் பதில் கூறாது எழுந்து நடந்தார். சீடர் தொடர்ந்தார். அகத்தியர் வாழும் பொதியமலை எதிர்ப்பட்டது. அதிலே ஒரு மரத்தின் அடியில் நிஷ்டையில் அமர்ந்தார். தொடர்ந்து வந்த பிரமச்சாரி விடவில்லை. நிஷ்டை கலையும் வரை காத்திருந்தார். பரத்துவாஜர் தவமிருந்த குளக்கரையில், தனக்கு ஞானோபதேசம், தம் சீடருக்கு பொதிகை மலையில் அகத்தியர் தவம் புரிந்த குன்றில் அருளுபதேசம் செய்ய நினைத்தார்போலும்!

நிஷ்டை ஏழு நாள் நீடித்தது. சீடரும் காத்திருந்தார். கல்லெடுத்துச் சீடன்மேல் வீசி விரட்டிப்பார்க்க முனைந்தார் சத்குரு. விடாக்கண்டனாக நெருங்கிவரும் சாதகனைக் கண்டார். அருகழைத்து அவதூத மார்க்கத்தின் நுட்பத்தை விளக்கினார். அவதூத நெறியிலுள்ள

சிரமத்தை விளக்கினர். சுட்டியும் தொட்டும் காட்டி உபதேசம் செய்தார். இல்லம் சென்று அன்னையை வலம் வந்து அவதூதராகிப் பூப்பிரதக்ஷிணம் வருமாறு ஆசிகூறி அனுப்பிவைத்தார். அதன்படியே சீடர் அவதூதராகிப் பூப்பிரதக்ஷிணம் புறப்பட்டார்.

1900க்கு தமிழ் ஆண்டு விகாரி வருடம் ஆனி மாதம் பௌர்ணமி திதியில் தம்மை விடாது பற்றி நின்ற கிருஷ்ண மூர்த்திக்கு ஜட்ஜ் ஸ்வாமிகள் உபதேசம் புரிந்து ஆட்கொண்டு ஸ்வயம்ப்ரகாசர் என்ற தீக்ஷா நாமமும் வழங்கினர் என்பதைச் ஸ்வயம்ப்ரகாசர் வரலாறு சுட்டிக் காட்டுகிறது.

பின்னால் கல்வடிப் படபோகிருய் என்பதைச் சுட்டிக் காட்ட கல்லால் சீடனை அடித்துக் காட்டிய சத்குருநாதர் ஸ்ரீஜட்ஜ் ஸ்வாமிகள் கருணையை வியக்காமல் இருக்க முடியுமா?

## அறிவிலிகள் செய்த அநீதி

தக்க ஆன்ம தாகமும் திட சித்தமும் உடைய ஒருவரைத் தனக்குப்பின் ஞான சந்தானமாக அடைந்துவிட்டோம் என்ற மகிழ்வில் ஜட்ஜ் ஸ்வாமிகள் ஆங்கே நிஷ்டையில் நிலைத்திருந்தார்கள். நிஷ்டையிலிருந்த முனிவரின் கழுத்தில் ஒரு செத்த பாம்பைப்போட்டு பழி கொண்டான் பரீக்ஷித்து மன்னன், ஒரு நாட்டின் மன்னனே முனிவரின் தன்மையறியாது இத்தகைய செயல் செய்தான் என்றால், அறிவில் குறைந்த, கல்வி கேள்வி அற்ற பாமரர் சிலர் ப்ரம்மேந்திரரின் உயர்வை அறியாது சிறுமை புரிவது வியப்பல்லவே!

நிஷ்டையில் நிறைந்திருந்த அவதூத சதாசிவ ப்ரம்மேந்திரரின் நீண்ட முடியையும், தாடியையும் சில விஷமிகள் நீக்கிவிட்டார்கள். நிஷ்டை கலைந்த பிறகே தமக்கு விஷமிகள்

செய்த அந்நிலை அறிந்தார். பழுத்த வயது. அவரூத ஆச்ரமத்தின் ஆச்சாரம், முடியும்–தாடியுமே, இதுவும் இறைவன் திருவுள்ளமோ என்று சுவாமிகள் எவர்மீதும் வேதனைப்படாது. எல்லாம் இறைவன் செயல் என்று புறப்பட்டார். பழுத்த வயதில் பல க்ஷேத்திரங்கள் சென்று தரிசித்தார். திரிசிரபுரம் தாயுமான தயாபரன் சந்நிதிக்கு வந்தபோது தமது அந்திம காலம் நெருங்குவதை அறிந்தார் ஜட்ஜ் ஸ்வாமிகள்.

## புதுக்கோட்டையை நோக்கி

புதுக்கோட்டை நகரில் தமக்குச் சமாதிக்கு இடம் என்பதை அறிந்தார். ஞான சந்தானம் புதுக்கோட்டைக்கு அருகிலிருந்து தானே கிடைத்தது என்று நினைத்தாரோ என்னவோ யார் கண்டார்கள்? புதுக்கோட்டை நகரை நோக்கி ஸ்ரீ ஜட்ஜ் சுவாமிகள் நடையாக விரைந்தார். புதுக்கோட்டை நகருக்கு 9 மைல் தொலைவில் நார்த்தா மலையில் பிரசித்திபெற்ற மாரியம்மன் கோவில் உள்ளது.

நார்த்தாமலையில் சோழர் காலத் திருப்பணியான சிவன் ஆலயம் ஒன்று இருக்கிறது. சிவாலயத்தில் ஸ்ரீ ஜட்ஜ் சுவாமிகள் இராஜயோகத்தில் அமர்ந்தார். அவர் அமர்ந்து இருந்த கோலம் யாவர் மனத்தையும் கவர்ந்தது. சிவலிங்கமே ஜீவனோடு அங்கு விளங்குவதைப்போல இருந்தது அக்காட்சி.

யோகியர் யோகத்தில் நிலைக்கும்போது ஸகஸ்ராரத்தில் இருந்து பெருகும் ஆனந்த மது நாடி நரம்புகளில் பரவி, மல ஜல விஸர்ஜனமுமற்று உடலைக் காத்து நிற்கிறது. ஆனந்த சொரூபமே அங்கு வடிவெடுத்து வந்ததோ என எவரும் நினைக்கும்படி அக்காட்சி அமையும்.

நார்த்தாமலை சிவாலயத்தில் ராஜயோகத்தில் அமர்ந்த பெருமான் நிர்விகல்ப சமாதி அடையும் நிலையில் இருப்பதை

அறிந்த அன்பர்கள், யார் இவர் என்று அறியாவிட்டாலும் புதுக்கோட்டை நகருக்கு ஒரு புனித கைங்கர்யத்தைச் செய்து முடித்தார்கள்.

இன்று அதிஷ்டானம் என்று பெயர்பெறும் புண்ணிய பூமி என்ன தவம் செய்ததோ. அன்று கைங்கர்ய பரர் களாக விளங்கிய பெருமக்கள் செய்த புண்ணியம் யாதோ. பெறற்கரிய பெருமானைச் சுமந்து வந்தவர்கள், உடன் இருந் தவர்கள், அனைவரும் புதுக்கோட்டை நகரத்திற்கு மட்டு மல்ல தமிழகத்திற்கே தனிப்பெரும் சேவைசெய்த புண்ணிய சீலர்கள் ஆனார்கள். பெருமானின் நிர்விகல்ப சமாதி கலையாமல், பக்தி சிரத்தையோடு சிவிகையில் எடுத்து வைத்து புதுக்கோட்டை நகருக்கு எடுத்து வந்தார்கள். வேதநாதமும் பின் தொடர்ந்தது.

## நிர்விகல்ப சமாதி

பல்லவன் குளக்கரையின் வடகரையிலிருந்து துறவிகள் மடத்திற்கு வந்தது வேதகோஷத்தோடு ஊர்வலம், அங்கு வந்து சேர்ந்ததும் தாம் வந்த காரியம் முடிந்தது. எடுத்த பிறவி பயன் அடைந்தது என்பதை அறிந்து ஸ்ரீஜட்ஜ் ஸ்வாமிகள் என்று இன்று உலகோர் போற்றும் ஸ்ரீஸதாசிவ ப்ரம்மேந்திர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் நிர்விகல்ப சமாதியில் நிறைவு பெற்றார். இறைவனுடன் ஒன்றினார்கள். எங்கும் ''நிறைந்தவரானார்கள்''.

செய்தியைப் புதுக்கோட்டை மன்னருக்கு மக்கள் அறிவித்தனர். புதுக்கோட்டை மன்னரின் திவானாக இருந்த பெரியார் திவான் வெங்கட்ராமதாச நாயுடு உடன் வந்தார், கண்டு மகிழ்ந்தார், வணங்கித் துதித்தார். சென்னையில் வழக்கறிஞராக வாழ்ந்தவர் திவான்.

ஸ்வாமிகளுடன் ஒரு சாலை மாணவராகச் சட்டக் கல்லூரியில் பயின்றவர், வழக்கறிஞராகத் திகழ்ந்த

போதும் துணைவராக விளங்கியவர். ஸ்வாமிகளின் வரலாற்றினை ஆங்கு இருந்தவர்களுக்கு எடுத்தியம்பினார். கேட்ட அனைவரும் அதிசயிக்க யாரோ ஒரு மகான் என்று மட்டும் அறிந்தவர்கள் ஸ்வாமிகளின் வரலாற்றை அறிந்து பெருமகிழ்வுடன் ஆனந்தக் கண்ணீர் வடித்தனர்.

புதுக்கோட்டை நகரம் புண்ணியம் செய்தது. புகழ் மிகுந்த யதீந்திரர் பெருமாள் சமாதி இங்கு அமைய இருக்கிறது. சகல அரசாங்க மரியாதைகளுடன் சமாதி காரியம் நிறைவு பெறவேண்டும். நகரத்தின் வடகிழக்குப் பகுதியில் அரசுக்குச் சொந்தமான தூய்மையான இடத்தில் சமாதி அமைய அரசர் பெருமான் அனுமதி வழங்கியிருக்கிறார் என்று திவான் வெங்கட்ராமதாச நாயுடு அவர்கள் அறிவித்தார்.

புதுக்கோட்டை நகரம் அன்று பொலிவுடன் திகழ்ந்தது. அந்தணர்கள் சிவிகை சுமக்க, வேத கோஷங்கள் முழங்க வாத்தியங்கள் வரிசை வரிசையாக அணிவகுத்து முழங்க மக்கள் அணிவகுத்துப் பின்தொடர, அரசப் பிரதிநிதியாகத் திவான் முன் நடந்துவர அரச வீதிகளைச் சுற்றி ஊர்வலம் இன்று அதிஷ்டானம் அமைந்திருக்கும் இடத்திற்கு வர, சகல பூஜா விசேட வைபவங்களுடன் திருமேனியைச் சமாதியுள் அடக்கம் செய்தனர்.

## புதுக்கோட்டை அதிஷ்டானம்

புதுக்கோட்டை சமஸ்தான மண்ணில் புண்ணிய புருடர்களின் சமாதி பலவுண்டு. எனினும் ஸ்ரீ ஜட்ஜ் சுவாமிகளின் அதிஷ்டானம் தனிச் சிறப்புடன் இன்று விளங்கி வருகின்றது.

சமாதி பூசைக்கு வேண்டிய அனைத்தும் அன்று குறைவு இல்லாது நடைபெற்றது. பின் நிகழவேண்டிய கைங்கர்யங்களும் தவறாது நடைபெற்றன,

தமிழகத்திற்குத் தண்ணீர் தட்டுப்பாடு ஏற்படும்போது கங்கை—காவிரி பிணைப்பைப்பற்றி அறிஞர்கள் சிந்தித்துக் கருத்து வெளியிட்டிருக்கிறார்கள்.

கிருஷ்ணா நதியின் நீரைக்கொணடு தமிழகத்தின் தாகத்தைத் தீர்க்கலாம் என்று இன்று அரசியல் மேல் மட்டத்தில் உள்ளவர்கள் அபிப்பிராயம் தந்திருக்கிறார்கள்.

வ ர ட் சி மி க் க புதுக்கோட்டைப் பிரதேசத்திற்கு காவிரியின் நீரைப் பயன்படுத்தலாமா என்று சிந்திக் கின்றார்கள். சென்ற நூற்றாண்டிலேயே தெய்வம் வகுத்த நியதியை மக்கள் சிந்திக்கவேண்டும். திரியம்பகம் என்னும் மலையில் உதயமாகும் கோதாவரி நதியின் கரையிலே கருவுற்று, கிருஷ்ணா நதிக் கரையில் வெளிப்பட்ட ஆன்ம ஜோதி புதுக்கோட்டை நகரத்தில் அதிஷ்டானத்தில் வந்து சங்கமித்திருக்கிறது. ஆன்ம தாகம் உடைய அனைவரும் காலமெல்லாம் வந்து தாகம் தவிர்த்துச்செல்ல கருணை பாலித்திருக்கின்றான் இறைவன், வாரீர் சோதரர்களே! அருட்ஜோதியாக, அன்பின் கடலாக எவருக்கும் தீங்கு நினைக்காத இறைவன் திருக்குமரராக, அவதூத சாம்ராஜ் யத்தின் அதிர்ஷ்ட செல்வராக விளங்கும் ஸ்ரீஸதாசிவ ப்ரம்மேந்திரர் ஐக்கியமாகி இருக்கும் அதிஷ்டானத்தில் தூய மனதோடு அமர்ந்து சித்த வலிமையைப் பெறுவோம். விரத ஞான வைராக்கிய சித்திகளைப் பெறுவோம். ஆன்ம தாகம் தவிர்ப்போம். ''பு ண ர் ந் த பாவமெல்லாம் பரிபூரணம் உணர்ந்த ஞானி விழிபடவோடுமே'' என்பதை அனுபவித்து அறிவோம்.

சூரிய சந்திர ஒளியால் உலக ஒளிபெற்றிலங்குகின்றது. எனினும் அமாவாசையன்று இரவு இருள் கவிந்திருப்பதைப் போன்று, அரசவைபவங்களுடன். ஆன்றோர்கள் கூடி அமைந்த புதுக்கோட்டை அதிஷ்டானத்தை இருள் கவிந்த காலம் ஒன்று உண்டு என்பதை இன்றைய மக்கள் அறியார்.

5

இந்த நூற்றுண்டின் தொடக்க காலத்தில் அமைந்த புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் பூஜா கைங்கர்யங்கள் மகா சமாதிக்குப் பின்னர் சிறிது காலம் தொடர்ந்து நடந்தது சந்தைக் கூட்டம் கூடிக் கலைவதுபோல, நாளடைவில் மக்கள் அறியாமையால் தாம்பெற்ற செல்வம் இன்னது என்பது அறியாது மயங்கி மறந்துவிட்டனர்.

அதிஷ்டானத்தை மறந்தனர். அதில் அமர்ந்த மகானை யும் மறந்தனர். கோபுரம் குப்பைமேடு ஆனது. குப்பை மேடு கோபுரம் ஆவதையும் இன்று பார்க்கிறோம். எந்த இடத்தில் அதிஷ்டானம் ஏற்பட்டது என்பதையும் மக்கள் மறந்துவிட்டனர்.

ஸ்ரீ ஸதாசிவ ப்ரும்மேந்திர சரஸ்வதி சுவாமிகளிடம் தீக்ஷை பெற்று ஞான சந்தானமாகத் திகழும் சேந்தமங்கலம் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச பரிவ்ராஜக ப்ரம்மேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் சேந்தமங்கலம் சந்யாசி கரடில் சமாதியில் ஆழ்ந்திருந்தார்கள், சமாதி கலையும்போது தனது குருநாதன் புதுக்கோட்டையில் சமாதி ஆனதும், அரசு ஆதரவுடன் ஆரம்பமான அதிஷ்டானம் மக்களின் அறியாமையால் குப்பை மேடாக அமைந்ததையும் அறிந்தார்கள்.

இரவோடு இரவாகப் புதுக்கோட்டைக்கு வந்து சற்குரு நாதன் மகாசமாதியடைந்த இடத்தைத்தேடிக் கண்டார்கள். அது இருந்த அவல நிலையைக் கண்டு வேதனை அடைந்தார். குப்பைகளை ஒதுக்கி, அகல் விளக்கேற்றி நிஷ்டை கூடிய நிலையில் புதுக்கோட்டை மக்களே தம் தவறுதலை உணர்ந்து, பக்தி சிரத்தைகொள்ள வேண்டுமென்று சங்கல்பித்துக் கொண்டு சேந்தமங்கலம் மீண்டார்கள்.

மகான்கள் சங்கல்பம் செய்துகொண்டால் அதனை நிறைவேற்றுவது சர்வேஸ்வரன் பொறுப்பாக முடிகிறது. மக்கள் மனதிலே நல்லெண்ணங்கள் தோன்றி தாமாகவே முன்வந்து கைங்கர்யம் செய்து இறைவன் திருவருளுக்குப் பாத்திரர்கள் ஆகிறார்கள்.

புதுக்கோட்டை மக்கள் சிலர் மனதில் அதிஷ்டானம் பற்றிய சிந்தனை எழுந்தது. இடம் அறியாது திகைத்தனர். சேந்தமங்கலம் சுவாமியிடம் சென்று விபரம் அறிந்து அதிஷ்டானத்தைப் புதுப்பிக்கத் துணிந்தனர்.

காலத்தின் கோலத்தால் மகா சமாதி ஆகும் சமயம் அரசுக்குச் சொந்தமான புனித இடம், குப்பை மேடாக உயர அதனை அதிஷ்டானத்திற்கு வழங்கிய திவான் வெங்கட்டராமதாசர் வாய்மொழி சாசனம் ஆகாததால் விற்பனைக்குரிய நிலமாக மாறியது.

அதிஷ்டானம் அமைந்த இடத்தை, குப்பை மேடாக இருந்த பூமியை, ஓய்வுபெற்ற நீதிபதி பதுமநாப சாஸ்திரிகள் விலைக்கு வாங்கியிருந்தார்கள்.

ஓய்வுபெற்ற நீதிபதி ஸ்ரீ பி வி. ரகுநாதய்யர் தலைமையில் அதிஷ்டானத்தை புனருத்தாரணம் செய்யவேண்டுமென்ற தாபம் எழுந்தது.

சேந்தமங்கலத்தில் சன்யாசி கரட்டில் மோன தவம் புரிந்த மாதவரும், ஜட்ஜ் ஸ்வாமிகளின் சீடருமான ஸ்வயம் பிரகாச மாமுனிவரிடம் சென்று அதிஷ்டானம் ஏற்பட்ட இடம் தெரியாது தவிக்கின்றோம் இடம்காட்டி அருள வேண்டுமென பிரார்த்தித்தார்கள்.

தனது குருநாதன் அதிஷ்டானம் சிறப்புறும் காலம் வந்துவிட்டது. தனது சங்கல்பம் நிறைவேறும் தருணம் வந்தது என்பதை அறிந்த ஸ்வயம்ப்ரகாசர் இடத்தை குறிப்பிட்டுக் காட்டினார். தனது சீடர் சங்கரானந்தாவையும் உடன் அனுப்பிவைத்து அதிஷ்டானம் அமைந்த இடத்தைக் கண்டு தெளியுமாறு ஆக்ஞாபித்தார்கள்.

ஸ்வயம்ப்ரகாசர் காட்டிய இடத்தில் அதிஷ்டானம் இருப்பதை பூமியைத் தோண்டி கண்டார்கள். அடிபீடம் விஸ்தரிக்கப்பட்டது. திருக்கோயில் அமைக்கப்பட்டது. கோபுரமும் எழுப்பப்பட்டது.

ஸ்வயம்ப்ரகாச மாமுனிவரே வந்திருந்து கும்பாபிஷேகம் நடத்தித்தர வேண்டுமென்று அன்பர்கள் பிரார்த்தித்தார்கள்.

அதிஷ்டானத்தில் சமாதி ஆனவர் ஜட்ஜ் ஸ்வாமிகள். இடம் கொடுத்தவரும் ஓய்வுபெற்ற நீதிபதி பதுமநாப சாஸ்திரிகள். திருப்பணிசெய்து அதிஷ்டானத்தை பிரபலப் படுத்த முன்வந்தவரோ ஓய்வுபெற்ற நீதிபதி ஸ்ரீ பி. வி. ரகுநாதய்யர். நீதிபதிகள் மூவர் கூடிய இடம் புதுக்கோட்டை அதிஷ்டானம் என்று கருதுவது வியப்பல்லவே.

இருள்படர்ந்த அதிஷ்டானத்தில் சுயம்பிரகாச ஜோதி வழிகாட்ட அருள் ஒளி உதயமாகி மீண்டும் அதிஷ்டானம் சுடர்விட நற்காலம் உதயமாயிற்று. ''சுயம்ப்ரகாச ப்ரம்மேந்திரர்'' வந்திருந்து கும்பாபிஷேகம் நடத்திப் பூஜா கைங்கர்யங்களுக்கும் ஏற்பாடு செய்வித்தார்.

குருவின் கட்டளைக்கும், குரு கைங்கர்யத்திற்குமாகவே பிறவி எடுத்த ஸ்ரீ சாந்தானந்த ப்ரம்மேந்திர சரஸ்வதி மகராஜ் அவர்களின் சங்கல்பத்தால் புதுக்கோட்டை அதிஷ்டானம் இன்று பூர்ணமாக ஒளியுடன் ப்ரகாசிக்கின்றது.

போகிகளுக்குப் போக வாழ்வும், யோகிகளுக்கு யோக வாழ்வும் விரும்புவோர் வேட்கை அறிந்து தவ அன்னை புவனேச்வரி ஆங்கு ஆலயம் கொண்டு கருணை பாலித்து அருள் வழங்குகின்றார். நடமாடும் புவனேச்வரி மாதாவாக விளங்கும் ஸ்ரீ சாந்தானந்தர் அவதார மகிமையை தமிழ் மக்கள் அறியவேண்டாமா? பரமேஷ்டகுருவின் அதிஷ்டானத்தில் அன்னை புவனேச்வரியின் சந்நிதியில் அதனை உருவாக்கும் பாக்யமும் அடியேனுக்குக் கிட்டவேண்டும் என்று சங்கல்பம் செய்து கொள்கின்றேன். அன்னை அருள்வாள் என்ற நம்பிக்கை எனக்குண்டு. நம்பினார் கெடுவதில்லை நான்கு மறைத் தீர்ப்பு. அம்பிகையைச் சரண்புகுந்தால் அதிகவரம் பெறலாம்.

வெல்க காளி பாதங்கள் என்போம்
வேண்டும் சக்தி தருவாள் அன்னை
ஓம் தத்ஸத்



புதுக்கோட்டை ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்
அவர்களின் ஸத்குருநாதரான

**ஸ்ரீஸ்ரீஸ்ரீ ஸத்குரு ஸ்வயம்ப்ரகாச ப்ரம்மேந்த்ர
ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அவர்கள்**

சேந்தமங்கலம்

உ
ஓம் சக்தி

# ஸ்ரீ அவதூத ஸ்வயம்ப்ரகாசர் வரலாறு

## மெய்ப்பொருள்

ஓம்! ஓம்! என்று கடல் அலைகள் கரதாளம் போடுகின்றன. வானம் ஓம்! ஓம்! என்று சொல்லி உறுமுகிறது. விண்ணைக் குடைந்து, கடலைக் கலக்கி, கப்பலை நிர்த்தனம் செய்யவிட்டு வேடிக்கை பார்க்க, தலைபோகிற வேகத்தில் சாடிவரும் சண்ட மாருதமும் ஓம் என்றே அலறுகிறது. மேடையிலே வீசுகின்ற மெல்லிய பூங்காற்றில் மிதந்துவரும் சுகந்தமும் ஓங்காரத்துடன் இழைந்தே வருகிறது. குன்றின் மேலிருந்து இறங்கிச் செல்லும் அருவியுங்கூட ஓமொலியில் ஒன்றுபட்டு ஜதி வரிசையுடன் தாளங்கொட்டித் தவழ்ந்து கலகலவென்று நடை பயில்கிறது. சோலைக் குயிலின் மோகன ராகமும், கிளியின் மழலையும் ஓமிசையின் ராக விஸ்தாரங்களே!

கோயில் மணியின் கண்டநாதமும் சங்கொலியும், சேகண்டி சப்தமும், சந்தை இரைச்சலும், நாயின் குலைப்பும், பக்ஷி ஜாலங்களின் கிலுகிலு சப்தமும் காற்றில் கலந்து அலை பரவும் போதும் ஓமொலிக்கின்றன. நீர், கனல், நிலம், வெளி, காற்று, மக்கள் இன்னும் அனைத்து ஜீவராசிகள் யாவும், நில்லாது சுழன்றோடும் அணுத்துகளும் அண்டங்களும் இந்த ஓங்கார சாம்ராஜ்யத்தின் ஆளுகையில் ஆனந்தத் தாண்டவம் ஆடுகின்றன.

அங்கு இங்கு என்ற பேதமின்றி எங்கும் பிரகாசமாய் நிலைபெற்று ஒளிரும் உண்மையே ஓங்காரம். இதுவே

தாரகம். இந்த தாரக மந்திர ஆஷியே சர்வமும். அழியாப் பொருளைக் குறிப்பதே ஓம் என்னும் உச்சாடனம்.

இதனை உலகுக்கு உணர்த்தி உய்விக்கவல்ல பெரியோர் காலா காலங்களில் அவதாரம் செய்கின்றனர். அருள் மொழி பகன்று, ஆட்கொள்ளுகின்றனர். அறிந்து ஆனந்தம் அடையும் ஆத்மாநுபூதிச் செல்வர்கள் உண்டு. பின்பற்றுவோர் சிலர். பிழைத்தோர் மிகச் சிலர். தாங்கள் பிழைத்தது மன்றிப் பிறரைப் பிழைக்கவைத்தோர் மிகமிகச் சிலர்.

அத்தகைய மஹான்களில் பலரைப் பிரகிருதி பெற்று எடுத்தது புண்ணிய பாரத நாட்டில்தான். அவர்களுடைய மேதையால், தபோபலத்தால், ஆன்ம விளக்கத்தால், அறவுரையால் பாரதப் பண்பு மட்டுமின்றி மனித சமுதாயமே உயர்வை அடைந்தது.

இந்த மண்ணிற் பிறந்த புழுவுங்கூட இதனால் பெருமை கொள்ளமுடியும். அத்யாத்மக் கலையின் ஆசார்ய பீடம் பாரத நாடு! ஞானம் என்பதன் உட்பொருள் பாரத பூமி!

பாரத ஹோம குண்டலத்திலிருந்து அருட்கனல் ஏழுநா விட்டுச் சுழன்றெழுந்து வானைத் தீண்டுகிறது. கால தேச வர்த்தமான பேதம் கடந்து சாஸ்வதமாக மணம் வீசி நிற்கும் வாடா மலர்களைப்பெற்ற அத்யாத்மச் சோலையே இந்தியா!

சர்வமத சமரஸ முழக்கம் செய்த விவேகானந்த ஜோதி எங்கு தோன்றியது? பொன்னையும், மண்ணையும் கங்கையில் கரைத்து மானிட மனமாசையும் கரைத்த பரமஹம்ஸரின் அவதார ஸ்தலம் எது? ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமையை முரசறைந்த அருட்சோதிக் குயில் அகவியது எங்கே? மானேந்தும் ஈசன் உளம் நாண, ஆட்டின் மறியேந்தும் பெருங்கருணைப் புனித வள்ளல் அவதாரம் செய்த புண்ணிய பூமி எது? தியாகமும் கருணையும் உருவாய் வந்த காந்தி அடிகளின் மாத்ரு பூமி எது? இப்புனித பாரத நாடேயன்றோ!

உலகு தொடங்கிய நாள் முதலாக காலந்தோறும் பிரதேசந்தோறும் எத்தனை மாறுதல்கள் நிகழ்ந்து விட்டன! எத்தனை அதிசயங்கள் கண்டோம்! எத்தனை உத்பாதங்களைப் பார்த்தோம்! நாகரீகத்தால் தலை நிமிர்ந்து நின்ற சாம்ராஜ்யங்களெல்லாம் எங்கே? மணிமகுடங்கள் எங்கே? சிங்காதனங்கள் எங்கே? தரை சாய்ந்துவிட வில்லையா? போன இடம் புல் முளைத்து விடவில்லையா? நாம் கண்டிருக்கவே காலம் விழுங்கிவிடவில்லையா? ஏன்! இப் பொழுதுதான் என்ன! இதோ! பூமண்டலம் முழுதும் குலுங்கி நடுங்குகிறதே! ஆத்ம பலத்தை எள்ளி நகையாடி மிருக பலத்தை நம்பி நின்ற நாகரீகங்களும், சாம்ராஜ்யங் களும் ஒன்றோடொன்று உராய்ந்து ரணகளத்தில் நொடிப் பொழுதில் சாய்ந்து சரிந்து ரத்த ஆற்றில் கலந்து நிணச் சேற்றில் புதைந்து கொண்டிருக்கின்றனவே! ஆயினும் என்ன அதிசயம்! பாரதநாடு மட்டும் காலத்தைவென்று அன்று போலவே தன் கலையும் நாகரீகமும் பண்பும் பலமும் இன்றும் நிலைத்து நிற்கக் காண்கிறோம். இதற்கு முன்னரும் எத்தனையோ பிரளயங்களிலெல்லாம் இந்தியா தப்பிப் பிழைத்திருக்கிறது. இனியும் பிழைத்திருக்க முடியு மென்றும், பிற தேசங்களையும் பிழைக்கச் செய்துவிடும் சக்தி தனக்குண்டென்றும் இந்த இருபதாம் நூற்றுண்டில்கூட இந்தியா திட நம்பிக்கையும் தைர்யமும் கொண்டிருக்கிறது.

கலியின் கொடுமையை எதிர்த்துப் பாரததேசம் மட்டும் மேன்மை நிலையை அடையச்சென்று கொண்டிருப்பது சாத்தியமாவது எதனுல்? அந்த ரகசியம்தான் என்ன?

மாந்தர்க்கு நீதி ஒருவகை, மன்னவர்க்கு நீதி மற்றோர் வகை என்று மனம்போனபடி மயங்கி உழன்று, விதம் விதமான வெள்ளைப் பெண்களுடன் வெளிநாடுகளிலும், அரண்மனை அந்தப்புரத்திலும் கூடிக் குதித்து, அறமும் அறவே அகன்று பேடிகளாகி, தலைக்கேறிய தன்மயக்கத் தால் ஆழ்ந்திருக்கும் க்ஷத்திரியர்களால் இந்த தேசம் மேன்மை அடைந்து விட்டதா? அன்றி, பகற் கொள்ளை

யடிக்கும் வணிகர்களால் இந்த நாடு அமரத்தன்மை கொண்டதா? அல்லது வேத மந்திரங்களின் பொருள் தெரியாமல் திரும்பத் திரும்ப உச்சரித்துக்கொண்டு அவற்றை நாணயவாரி செலாவணியாக்க முயன்று நிற்கும் முப்புரி நூலோரின் மூடத்தனத்தால் இந்த பூமி இன்றும் அழியாமல் நிற்கிறதா? ஏனையோரின் இடம்பமா இந் நாட்டின் இணையற்ற பலமாக இலங்குகிறது? ஒருநாளு மில்லை.

இந்துஸ்தானத்து யோகிகளின் தபோவலிமையால்தான் இந்தத் தேசமட்டும் இன்னும் நிலைத்திருக்கிறது. கிருத யுகத்தை ஆக்ஞாபிக்கும் அண்ணல் இந்நாட்டிலன்றி வேறெங்கும் தோன்றமாட்டான். அச்சம், பேடிமை, அடிமைச் சிறுமதி யாவும் பொடிப் பொடியாகி, ஏற்றம், தாழ்வு, இன்மை, ஏதேஷ்டம் என்ற பேதங்கள் போகக் கடுந்தவம் புரியும் யோகீச்வரர்களன்றி வேறு யாரும் இந்தியாவைக் காத்து நிற்கும் சக்தி படைத்திருக்கவில்லை.

ரிஷிகளும், பக்தர்களும், நாயன்மார்களும், ஆழ்வார் களும், மகாகவிகளும் இவ்வளவுபேர்தான் என்று கணக்கை நேர்செய்து வைத்துக்கொண்டு இனி அந்த வரிசையில் வைத்தெண்ணத் தக்க மகான்கள் பிறக்க மாட்டார்களென்று மயங்கி நிற்பது அறிவீனம். ஏடுகள் கணக்கை நேர்செய்த பின்னரும், அத்தகைய அவதார புருஷர்கள் எண்ணிலர் இம்மண்ணில் தோன்றியிருக்கிறார்கள். சதாசிவ ப்ரம்மேந் திராள், பரமஹம்ஸர், விவேகானந்தர், வள்ளலார், காந்தி அடிகள், அரவிந்தர், ரமணர் முதலானவர்களெல்லாம் மஹனீயர்கள் பரம்பரையில் வந்தவர்கள் அல்லரோ?

இன்றும் நம்மிடையே மஹான்கள் இருக்கிறார்கள். இன்னும் தோன்றுவார்கள் என்பது உறுதி. கால சக்தி தேவையானபோதெல்லாம் கண்ணொளி காட்டிக் கருணை புரியும்போது அவதார புருஷர்கள் தோன்றுமலிரார்.

நான் என்னும் ஆணவம் அகற்றி, இந்த ஞாலமெல்லாம் தானெனக்கொண்டு பிறர் ஊனைச் சிதைத்தபோதிலும் தனது உள்ளம் அருளினால் நெகிழும் பரம தயாளுவும் மேதாவியு மானவர் ஞானி என்று போற்றப்படுவர். இந்தத் தன்மையே மனிதனை அமர நிலைக்கு உயர்த்துகிறது. இந்தத் தன்மையை பிறவியிலே அமையப் பெற்றோரே அவதார புருஷர்கள்.

தமிழ் நாட்டுத் தவப்புதல்வனே, உன் கண்ணெதிரே உன் கன்னங்கள் அமுதூற அருட்குயில் என்று அண்மையில் அகவுதல் கேள். சர்வசங்கபரித்யாகராய், அவதூதராய், சர்வஜீவதயாபர மூர்த்தியாய், "சேந்தமங்கலம்" தத்த கிரியில் குகாலயத்தில் எழுந்தருளியிருக்கும், சாந்த சொரூபராய் விளங்கும் "பரமஹம்ஸ பரிவ்ராஜக ஸ்ரீஸ்வயம் ப்ரகாச ப்ரம்மேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் பாரத நாட்டின் யோகீஸ்வரர்களின் மரபில் வந்தவர்.

அவர்களின் திவ்ய தரிசன விசேஷத்தால் அன்பர்களின் அறியாமை இருள் அகன்றது. சச்சிதானந்தமாய் விளங்கும் அடிகளின் பேரருளுக்குப் பாத்திரமானவர் எண்ணிலர்.

முழுமதி மயிர்த்தாலன்ன முகந்திகழ் கருணை நோக்கு நம்மைக் கவர்கிறது. மூர்க்கரும் நேரிற் கண்டால் முகந் திடும் சாந்த வீச்சு நம்மை நெக்குருகச் செய்கிறது. இயற்கையோடு அமைந்த குகாலயத்தில் வீற்றிருந்து அத்யாத்மச் சுடர் விடுக்கும் அடிகளைத் தரிசிப்பது பாக்யம்.

காலையில் வாசமலர்களுடன் புன்னகைத்து காக்கையும் குருவியும்கூடி விளையாட, புற்றரவும் விடமற்ற அடிகளின் அன்புப் புல்லாங்குழலுக்கு உருகி நிற்கும் அற்புதத்தை என்னென்பது!

விண்மீன், மேகம், இரவி மதிபோன்று வெளிச்சத்த மின்றி ஜகத்திற்குழைக்கும் ஐயனின் திருவிளையாடல்

அனந்தம், அவர்களாடிய சித்துகள் எண்ணில. அவர்களின் இகலோக யாத்திரையின் திரைவிடப்படுவதன்முன் அடிகளின் தரிசனம் ஆன்ம லாபந்தரும். ஆட்டம் முடிவதற்குள் ஆனந்தத் தாண்டவத்தைக் கண்டுகளிக்காத கண்கள் வீணே. அடிகளின் அத்யாத்மச்சுடர் என்றென்றும் ஒளிவீசுமென்பது உறுதி. பேரானந்த நர்த்தனத்தின் ஜங்கார சப்தம் சாச்வதமாக நம் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கும். அடிகளாரின் அத்யாத்ம வாழ்வின் ஏடவிழ்ந்து இன்பத்தேன் பிலிற்றி நிற்கிறது. தமிழ் மக்களே, வாருங்கள். தவசிரேஷ்டரை, யோக யோகீஸ்வரரைத் தரிசிப்போம். அவருடைய கல்யாண குணானுபவங்களைப் பஜிப்போம். அடிகளாரின் அறவுரை நமக்கு வழிகாட்டி பேரின்ப சித்திப் பெருவாழ்வை அருளட்டும். அடிகளின் பூர்வாசிரமம் முதலியவற்றை அறிவதின்மூலம் அந்த திவ்ய சரித்திர அடிச்சுவடி நம்மை இருட்டில் இருந்து வெளிச்சத்திற்கு, சாச்வதமான ஒளி உலகிற்கு அழைத்துச் செல்லட்டும்.

## உதயம்

இன்று சேந்தமங்கலம் தவச்சாலையில் வசந்த கீதம் இசைக்கும் அருட்குயிலைப் பெற்றெடுத்த பெருமை நடு நாட்டிற்கே உரிமை. யோக பூமி என்று அறிஞர் புகழும் இந்தப் பிரதேசம் மஹான்கள் பலரைப் பெற்றெடுத்துப் புகழ் அடைந்திருக்கிறது.

இன்று பாழடைந்த பழங்கோட்டையின் சாயைபோலக் காக்ஷியளிக்கும் கல்பட்டு என்னும் சிற்றூர் அடிகளாரின் அவதார ஸ்தலம்.

பித்தா! என்றழைத்து எதிர் வழக்காடிய அன்பனைத் தடுத்தாட்கொண்ட பிரான் அர்ச்சா ரூபமாய் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் திருவெண்ணெய்நல்லூருக்கு வடக்கே 5 மைல் தூரத்தில் உள்ளது கல்பட்டு. இடையே தென்பெண்ணை பிரவஹித்து ஓடுகிறது.

பல ஆண்டுகட்கு முன்பு இச்சிற்றூர் கல்பட்டு சகல சம்பத்தும் நிரம்பி விளங்கிய காலம். பிரஜோத்பத்தி ஆண்டு கார்த்திகைத் திங்கள் பதினான்காம் நாள் 28—11-1871த் தேதி அடிகளார் இங்கு திருவவதாரம் செய்தார்.

எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகிய அந்தணர் ராமஸ்வாமி சாஸ்திரிகள் இந்த அருட் குழந்தையை மகவு எனப் பெற்றெடுத்த பாக்கியவான். இவர் வடதேசத்து வடமர் மரபில் வந்த ஸ்ரீவத்ஸ கோத்ரத்தவர். மஹான் என்று உலகெல்லாம் போற்றும் உத்தமனைப் பத்து மாதம் சுமந்த புனிதவதி ஜானகியம்மையின் பாக்யமே பாக்யம்!

அடிகளின் பூர்வாசிரம நாமதேயம் **கிருஷ்ணமூர்த்தி** என்பது. கிருஷ்ணமூர்த்திக்கு மூன்று தமையன்மார் முறையே நாராயணசாமி, குருசாமி, நரசிம்மன் என்போர். தவிர இரு தமக்கைகளும் உண்டு.

குழந்தை கிருஷ்ணமூர்த்தி 5 ஆண்டுகள்வரை தாய் மாமன் வீட்டில் வளர்ந்து வந்தார். அருட்குழவியின் ஆடல் பாடல் கண்டும், திருமுகப் பொலிவு கண்டும் யாவரும் போற்றிப் புகழ்ந்தனர்.

## பஞ்சம் சென்ற பாதை

தாது வருஷப் பஞ்சமென்று உலகப்ரசித்தி. இக்கொடிய பஞ்சம் சென்ற பாதையெல்லாம் பட்டுப்போயிற்று. காடு எல்லாம் விறகான செய்தி. பேய் மேய்ந்த காட்டைப்போல் நாடெங்கும் புகைந்து போயிற்று.

சாதாரணமாக சோழ நாட்டின் செழுமை நடுநாட்டிற்கு இல்லை. பஞ்சம் வந்துவிட்டால் சொல்லவும் வேண்டுமா? பஞ்சமோ பஞ்சம்! கண்ட இடமெல்லாம் கானல்! பட்டினியால் மக்கள் பரதவித்தனர். ஊரைவிட்டு கால்போன போக்கில் போனவர் பலர். வழிநடுவில் அனாதைகளாக இறந்தவர் எத்தனையோ பேர்! மனிதனை மனிதன் அடித்துத்

தின்னும் கொடுமையான பஞ்சம். பஞ்சம் சென்ற பாதையில் கல்பட்டும் அகப்படாமல் போகவில்லை. தேய்ந்துபோன ஊரைவிட்டுக் கிளம்பிய கோஷ்டியில் ராமஸ்வாமி சாஸ்திரி களின் குடும்பம் ஒன்று. செல்வர்களின் நிலையே சொல்ல முடியாத கோரமென்றால் வித்தையை நம்பி வாழ்ந்து வந்தோர் நிலைமை கற்பனைக்கும் இடந்தராதன்றோ!

சாஸ்திரிகள் ஊரைவிட்டுப் பிரிந்து, தங்கி நிற்க நிழல் நாடி, பருக நீர்நாடி, இருக்க நிழல்நாடிப் பாட்டை வழி செல்லவேண்டியதாயிற்று. வழியில் எத்தனையோ இடையூறு கள்! சொல்லொணாத் துன்பங்கள்! அத்தனைக்கும் தப்பிப் பிழைத்து சோழவள நாட்டைநாடி காவிரிக் கரையில் ஆடுதுறை வந்துசேர நான்கு ஆண்டுகள் பிடித்தன.

சோறுடைத்தென்னும் பெருமைவாய்ந்த சோழவளநாடு வந்த விருந்தினரை எதிரேற்று ஆதரிக்கத் தயங்கவில்லை. ஆடுதுறையில் ஆதரவு கிடைக்கவே சாஸ்திரிகள் ஈசனை நம்பி இல்லறம் நடத்துவாராயினர்.

## இளமையும் கல்வியும்

ஓதாதுணர்ந்த ஞானக் குழந்தையாம் நம் கிருஷ்ண மூர்த்திக்கு வித்யாப்யாஸமும், உபநயனமும் முறையே நடைபெற்றன. கிருஷ்ணமூர்த்தி 7ம் வகுப்பு வரை திருவிடைமருதூர் என்னும் திவ்ய ஸ்தலத்தில் பயின்றார். பிறகு கும்பகோணத்தில் பட்டஸ்ரீ நாராயண சாஸ்திரிகளின் ஆதரவும், ஆங்கிலக் கல்வியும் கிடைத்தது. வடமொழிப் பயிற்சியும் ஏற்பட்டது. 19வது வயதில் திருவனந்தபுரத்தில் மெட்ரிகுலேஷன் பரீக்ஷையில் தேர்வு பெற்றார். எல்லாம் சரிதான்.

ஆயினும், உலகுய்ய அவதரித்திருக்கும் உத்தமன். பள்ளிப் படிப்போடு அமைந்துவிடுதல் இயலுமோ? நடராஜ மூர்த்தியின் திவ்ய லீலாவிபூதி ஐயன் மனதைக் குழவிப் பருவத்தே கவர்ந்திருக்க அத்திவ்யானுபவம் வீண்போமோ!

வெளித் தோற்றத்துக்கு லௌகீகக் கல்வியும் கற்றபோதே அத்யாத்மக் கல்வியும் தானே மலர்ந்து வரலாயிற்று. அந்த ஆனந்த லாகிரியில் ஐயன் ஆழ்ந்து நின்றாரென்பதை அக்காலத்தில் யாரே அறிவர்? உள்ளக் கனலும் ஆத்மீக தாகத்தை விசிச் சுடர்விடச் செய்ய பட்டினத்தார் தாயுமானவர் அருள் வாக்குகள் துணை நின்றன. நாளடைவில் வளர்ந்துவந்த ஆத்மீக தாகம் இறைக் காதலாக மலர்ந்துவிட்டது. உள்ளம் இறையுணர்வில் ஒன்றி நின்று களிநடம் புரிந்தது.

## உத்தியோகம்

ஆங்கிலப் படிப்பும் அறிவு விளக்கமும் அருட் கனிவும் நிரம்பி விளங்கும் நம் மூர்த்தியைத்தேடி உத்தியோகங்கள் வந்தன. வையகம் பயனுற வாழ்ந்திட விரும்பிய கருணை வள்ளலான நம் மூர்த்தி ஆரம்பத்தில் ஆடுதுறை அடுத்த சிற்றூர்களில் பள்ளி ஆசிரியராக அமர்ந்து அருட்பணி புரிந்து வந்தார். பின்னர் சேலத்தில் செட்டில்மெண்ட் இலாகாவில் ரூபாய் ஐம்பது சம்பளத்தில் உத்தியோகம் ஏற்றார். பந்த நிவர்த்தியைத் தேடியலையும் மூர்த்தியின் ஹிருதயம் இந்த உத்தியோக பந்தங்களால் மாசுற்றதோ, தேய்ந்ததோ, தளர்ந்ததோ, போய்விடவில்லை. அதற்குப்பதில் நாளுக்குநாள் உயிரில் அத்யாத்மக் கனலேறலாயிற்று.

குமாஸ்தாக்களுக்கு இயல்பான வேலை மிகுதியினால் மூர்த்தியின் ஊனுடல் துன்புறும் காலமுமுண்டு எனினும் இதெல்லாம் வினை நீங்கும் வகையென்றெண்ணி அநுபவிப் பார். ஆயினும் உத்தியோக அலுவல்களை அல்லும் பகலும் நெடுநேரம் கவனித்த பின்னர் வழக்கம்போல் தனி மோனத் தவத்தில் ஆழ்ந்து இன்புறத் தவறுவதில்லை. உடனுழைத்த சக ஊழியர்கள் தோழரின் பக்குவநிலைகண்டு போற்றிய துடன் தங்களால் இயன்றவரை வேலையைப் பகிர்ந்து கொள்ளவும் தலைப்பட்டனர்.

ஒருநாள் மூர்த்தி தனது காரியாலய தலைமை அதிகாரியுடன் வெளியூர் செல்லவேண்டிய தருணத்தில் தியான சமாதியில் ஆழ்ந்துவிட நேர்ந்தது. உரிய காலத்தில் சேவகன்வந்து எழுப்ப முயன்றான். அருகிருந்த உத்தியோகத் தோழர் அவனைத் தடுத்து மூர்த்திக்குப் பதில், தானே தலைமை அதிகாரியுடன் சென்று கடன் புரிந்தார். நிஷ்டை கலைந்தெழுந்த மூர்த்தி நிகழ்ந்ததைக்கேட்டு திருவருளை வியந்து பேரானந்தமடைந்தார். இம்மாதிரி உதவிகள் தடையின்றிக் கிடைக்கவே மனம் பின்னும் பேருறுதி பூணலாயிற்று.

## ஆசை வலை

எத்தனை நாளைக்குத்தான் இந்தப் பந்தத்தில் பிணிப்புண்டு கிடக்கிறதென்ற கவலை உண்டாகவே உத்தியோகத்தில் வெறுப்பும், விடுதலையார்வமும், அத்யாத்ம வான வெளியில் பறக்கும் அவாவும் கரை கடந்து வளரலாயிற்று.

அன்பனின் ஆத்மீக தாகம் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமாயிற்றோ அவ்வளவுக்கவ்வளவு பாசபந்தங்கள் ஆசை வலை விரித்து வீழ்த்த வழிதேடினவென்று கூறத் தக்கவாறு பிணிப்புகளும் சோதனைகளும் முளைத்தெழுந்தன.

நம் மூர்த்திக்கு சீக்கிரத்தில் சென்னைக்கு மாற்றலும் சம்பள உயர்வும் கிடைத்தன. உத்யோகத்தைவிட விரும்பியபோது, உத்தியோக கனமும் பொருள் கனமும் உயர்ந்துவிட்டது. பதவியும் பொருளும், வேண்டுவோரை வெறுப்பதும், வெறுப்போரை அணைவதும் அதிசயமே!

இளவயதும் அழகும் பெருமையும் பொருளும் பதவியும் பெற்ற அன்பனை மையமெனும் மாயவலையில் வீழ்த்த, பெற்றோரும் உற்றோரும் விரும்பினர். அன்பனுக்கு நலம் புரிவதாக அவர்கள் நினைத்தனரன்றி அவருடைய பக்குவ நிலையை அவர்கள் உணர்ந்தனரல்லர்.

பெண்களைப் பெற்றோர் வரனைத்தேடி மூர்த்தியைக் கண்டு பிடித்தனர். இவரைப் பெற்றோர் இணங்கி நின்றனர். தமையன்மார் சரிசொல்லிவிட்டார்கள். உறவினர் மகிழ்ச்சி தெரிவித்தனர். ஆயினும் என்ன? பாதி கல்யாணம் நிச்சயம் என்றால் அது சாத்யமாவதெப்படி?

மூர்த்தி சோதனையில் தளராது எதிர்த்து நின்றார். ஓர்புறம் பதவியும் பொருளும் உறவாட, மறுபுறம் பெண் ஆசை நாணிக்கோணி நர்த்தனமாடியது அருட்கனலாம் ஐயனிடமோ மாயையின் ஜால வேலைகள் பலிக்கும்! உண்மையறிந்த ஆன்ம ஞானிகள் மாயையின் படலங்களைக் கிழித்தெறிந்துவிட மாட்டார்களோ? பந்தங்களைக் கழற்றும் முயற்சியில் ஈடுபட்டிருந்த அன்பனோ சோதனையில் தோற்பான்? தந்தையின் கட்டளையும், தாயின் கண்ணீரும், தமையன்களின் சினமும், உற்றார் ஏச்சும், ஊரார் பேச்சும் ஏதும் பயனிலாதாயிற்று.

## பிணிப்பு

தோற்றோடிய மாயை வேறொரு விதத்தில் தன் வேலையைக் காட்டலாயிற்று. ஐயன் அறவழி நிற்பவர் அன்றோ! அறத்தின் ஆணையால் ஐயனை மடக்கவும் முயன்றது.

தம்பியின் பக்குவமறியாத தமையன்மார் சீறினர். "இதற்கோ உன்னை வளர்த்து, செலவிட்டுக் கல்வி பயிற்று வித்து ஆளாக்கிவைத்தோம். உன் விஷயமாகப் பட்ட பாடு எல்லாம் வியர்த்தமாகப் போயிற்றே. மூவாயிரம் ரூபாய்க்கு மேல் உன்னால் கரைந்துவிட்டது. எங்கள் சொற்படி கேட்டு நங்கை ஒருத்தியை மணந்து நாலுபேர் மெச்சக் குடித்தனம் செய்ய இஷ்டமில்லாவிட்டால் உனக்காகச் செலவான மூவாயிரத்தையும் கீழே வைத்துவிட்டு எக்கேடாவது கெட்டுப்போ என்று உறுமினர். "ஓம்" என்றார் அடிகள். சோதனையில் வெற்றிபெற இந்த சுடுசொல் ஒரு ஊன்று கோலாயிற்று. "நல்லவேளை, அங்ஙனமே செய்வேன்! எப்பாடுபட்டேனும் உங்கள் பணத்தைப் பூராவும் கொடுத்து

விடுதலை பெறுவேன். ஆனால் ஒரு நிபந்தனை, மணம் என்ற பேச்சுகூட இனி என் காதில் விழக்கூடாது'' என்று தீர்மானமாகக் கூறிவிட்டார்.

கோபத்தில்கூறிய வார்த்தையென்று அலட்சியமாக இருந்துவிட்டனர் தமையன்மார். இனி இவரை வழிப்படுத்த இயலாதென்று திட்டமாகத் தெரிந்துவிடவே செயலற்றுத் திரும்பினர்.

மூர்த்தி நிபந்தனையை நிறைவேற்றுவதில் முனைந்து நின்றார். தமையன்மார் செயலற்றுத் திரும்பினரெனினும் ரூபாயைத் திரும்பப்பெறும் விஷயத்தை அவர்கள் கோபத்தில் கூறினரேயன்றி உண்மையில் கூறினவரல்லர். ஆயினும் அருளன்பர் அதனையும் உண்மையாகவே எடுத்துக் கொண்டார்.

''ஆம்! அவர்கள் எனக்கு செலவிட்ட ரூபாயை திரும்பக் கொடுக்காமல் நான் விடுதலை அடைவதற்கில்லை. அவர்கள் கடனைத் தீர்த்து என்னைத் தடுத்தாட்கொள்ள இறைவருள் என்று கைகூடுமோ'' என்று அல்லும் பகலும் அரும்பாடு பட்டு உழைத்துக் கடன் தீர்க்க பொருள் சேர்ப்பதில் கவனம் செலுத்தினார்.

## விடுதலை

சில காலமாகவே துறவறத்தில் விருப்பம் மிகுதியிருந்தும் நிபந்தனையின் காரணமாக துறவறமேற்பதை ஒத்திவைக்க வேண்டியதாயிற்று. ஆத்மானுபூதியில் கலந்து நின்ற அன்பரின் உள்ளம் பொருள் சேர்க்கும் கவலையால் புகைய லாயிற்று. கொஞ்சம் கொஞ்சமாக பாங்கியில் பணம் சேர்க்கப்பட்டு வந்தது. மீண்டும் சோதனை ஆரம்பமாயிற்று சகோதரர்களுக்கு இடையே இருந்த நீண்ட மௌனம் கலைவதற்கு, பரனூர் முத்துசாமி சாஸ்திரிகள் காரண பூதராக முளைத்தார், தன் புதல்வியை கிருஷ்ணமூர்த்திககு விவாஹம் செய்து கொடுக்க விரும்பிய சாஸ்திரிகள் மூர்த்தி யின் தந்தையை அடுத்தார், தந்தையின் ஆணையை

சிரமேற்றுங்கி குருசாமி கனபாடிகள் நிபந்தனையை பெரிதாகக் கருதாது தம்பியிடம் மீண்டும் வந்து கட்டவிழ்த்தார். நான்கு நாட்களாக தலைமைனர் 'காத்திருந்தார் தம்பியின் மௌனம் சகிக்க முடியாததாயிற்று. கோபத்தால் கனன்று எழுந்த குருசாமி கனபாடிகள் குதித்தெழுந்து குடத்து நீரைத் தூக்கிவந்து தம்பியின் தலையில் கவிழ்த்தார்.

மலை குலைந்தாலும் மனம் குலையாத மகான் இதற்கு எல்லாம் மசிவார். புன்னகை மலர்ந்த புனித நோக்கோடு ''கனபாடிகளே! நல்லவேளை! தண்ணீர் தெளித்து என்னை தனியே விட்டுவிட்டீர்கள். இன்றே விடுதலை பெற்றேன். இன்றே புனித நாள்! நான் நம்பிய நடராஜன் நலமே புரிந்தான்! நிபந்தனையை மீறி விவாகத்திற்கு மீண்டும் வற்புறுத்தியதால் முறிச்சீட்டு இத்தோடு முறிந்தது. உமக்கு பந்தப்பட்டிருந்த காலத்தில் உம் நிபந்தனைப்படி நான் சேர்த்த தொகை ரூ. 500 இதோ பாங்கில் இருக்கிறது. பெற்றுக்கொள்ளும். இனி எனக்கு பந்தங்கள் ஏதுமில்லை'' என்றுகூறி, அன்றே உத்தியோகத்தையும் உதறித்தள்ளி, பெருமகிழ்ச்சியடைந்தார். துறவு பூண்பதற்கு இறைவனின் சமிக்ஞையே இந்த நாடகம் போலும்!

## சற்குரு யார்?

மானிட சிற்பியின் மகோன்னத மேதையில் உருப்பெற்று எழுந்த ஒரு கல், மனித சமுதாயம் தலைவணங்கும் மகா தேவனை தன்னுள் ஆவாஹனம் செய்துகொள்கிறது. அதனுடன் பிறந்த வேறொரு கல் அதே சிற்பியின் மனோ பீஷ்டத்தால் மாந்தர் மிதித்தேறும் மிதிக்கல்லாய் சமைகின்றது. தெய்வச் சிற்பியின் அலகிலா விளையாட்டில் ஆவிர்ப்பவித்தெழும் 'அனைத்து ஜீவராசிகளும்கூட அவன் இச்சைப்படியே அமையுமன்றோ! தன் அருள்விளக்கத்தை அகிலமெங்கும் அலைபரப்ப அருட்குழந்தைகளை அனுப்பும் அண்ணல் பிரகிருதியின் மாயா சம்பந்தத்திலிருந்து அவர்களை தடுத்தாட்கொள்ள உரிய காலத்தில் உளம் பற்றுதிருப்பானே!

அத்தகைய அருட்குழந்தை கிருஷ்ணமூர்த்தி பந்தங்களில் இருந்து விடுதலை பெற்றார். உரிய நாள் வந்துற்றது. சற்குரு தரிசனம் நாடி காசியம்பதியை நோக்கி நடந்தார்.

காசியம்பதியில் புண்ணிய கங்கையில் தீர்த்தமாடி விஸ்வேஸ்வர தரிசனம் செய்து கொண்டு சிலநாள் தாமதிக்க தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் தரிசனம் கைகூடியது. கல்லாலின் புடை அமர்ந்த கருணையங்கடல் இவரேயென்று கண்டு போற்றி கண்ணீர் மல்கிக் கரைந்துருகி நின்ற அன்பனின் முகப்பொலிவுகண்டு சுவாமிகள் அபயமளித்தாதரித்தார், மூன்று வருட காலத்திற்குள் சிவஞானபோதச் செல்வம் பெற்ற மூர்த்தி பின்னர் அங்கே ஒரு மௌன சுவாமிகளை அடுத்து சிலகாலம் இருந்தார். இதற்கிடையில் ஊனுடல் நோயுற நேர்ந்தது. இதையறிந்த அன்னை தந்தையர் ஓடோடியும் வந்து அருட்சுடராக விளங்கும் ஐயனை ஆடு துறைக்கு வாவென அழைத்தனர். நமது அடிகள் தொண்ணூற்றாறாவது நாள் வந்து சேர்வதாக உரைத்து அவர்களை அனுப்பினரே இன்றி இடம் விட்டு பெயர்ந்தார் இல்லை. சிலநாட்கள் கழித்து குருதேவரின் சன்னிதானத்தில் அடிபணிந்து ''இப்போதே சன்னியாசம் தரவேண்டு'' மென பிரார்த்தித்தார், அன்பனின் துறவுக்குரிய வைராக்கிய சித்தத்தை அறிந்தும் ஆசாரியர் ''அன்னை தந்தை அனுமதி இன்றி துறவு பூண்பது அழகல்ல, அனுமதிபெற முயல்க!'' என அருளினார்

காசிக்குப்போயும் கர்மம் விடவில்லை. பெற்ற மகன் பெருந்துறவு பூண யாரே சம்மதிப்பர்? எளிதில் அனுமதி கிடைக்காதென்று அன்பன் கலங்கி நின்றமை கண்டு ஆசாரியர் அருளிய ஆலோசனையின்படி, தந்தைக்குத் தன் நிலை உணர்த்தி அனுமதிகோரி கடிதம் வரைந்தார். பதிலும் ஆசார்யர்க்கே வந்தது. அனுமதியல்ல, ஆசாபங்கமே! கலங்கி நின்ற அன்பனுக்கே ஆசாரியர் பகன்ற அறவுரை இது ''அன்ப! தந்தையின் அனுமதியின்றி சந்நியாசம் அளிப்பது முறையல்ல. அவர் விருப்பப்படியே தக்ஷிணம்

செல்! தகுந்த சமயத்தில் இறைவன் உன்னை தடுத்தாட் கொள்வான். கவலையைவிடு, உடல் அளித்த உத்தமர்க்கு உறுகடன் புரியாது உய்வதற்கில்லை, மகனே, உன்மனோ பீஷ்டம் நிறைவேறுவதாக.''

வேறுவழியின்றி விரைந்தார் தக்ஷிணம் நோக்கி. காசியில் வாக்களித்தபடி 96வது நாள் ஊர் எல்லைமிதித்தது ஆச்சர்யம்; விடுதலை விழையும் ஆன்ம வீரனுக்கு வருவதற்குமுன்னே வழி திறந்திருந்தது. வீட்டிற்குள் நுழையவேண்டிய சந்தர்ப்பமே இல்லை. மூர்த்தியின் தந்தையார் அன்று காலையிலேயே அரனடி சேர்ந்திருந்தார். இச்சேதி கேட்டு நேரே மயானத் திற்கு விரைந்து சென்று காத்திருந்தார். கல்லென்று சுற்றத்தார் கணங்கொண்டலறி பிணங்கொண்டு காடுற்றனர்! அடிகள் மட்டும் முகமலர்ச்சியோடு வீற்றிருந்தார். சுவாமிகள் பிரேத தகனத்தில் பங்கெடுத்துக் கொள்ளவில்லை. பலர் இவரை வெறுத்தனர். எனினும் அடிகளின் உண்மை நிலையை அறிந்த உத்தமர் சிலர் போற்றவும் செய்தனர்.

கிரியைகள் யாவும் முடிந்த பின்னர், அன்னையைக்கிட்டி அனுமதி வேண்டினர். முயற்சி வீணாயிற்று. சில நாட்களில் தமையன்மார், தாயுடன் புறப்பட்டு ஜீவனோபாயம் நாடி புதுக்கோட்டையை அடுத்த கானம்பேட்டை எனப்படும் பிர்ஹுமவித்யாபுரம் சென்று வசித்தனர். அவர்களை விடாது தொடர்ந்து சென்று அடிகள் மேலும் முற்றுகையிடலாயினர். தாயும், தமையனும்காண ஏக வஸ்திரத்துடன் வஸ்திரத்தில் பிச்சையேற்று உண்டு, எஞ்சியதை காக பலியாக அளித்துக் காலம் நோக்கிக் காத்திருந்தார்.

அடிகளின் ஆத்மானுபூதியை அருகிருந்தோர் கண்டு அதிசயித்தனர். அக்காலத்தில் அடிகளின் அருந்துணைவர் காக்கையும் குருவியும் கல்லும் மண்ணும் ககனமுமேயாகும்.

நாட்கள் மாதங்கள் கடந்து ஓராண்டுமாயிற்று. ஆயினும் அடிகள் தன் முற்றுகையைத் தளர்த்திடவில்லை. முன்னொரு சமயம் நிபந்தனைகூறி நிலைகுலைந்த தமையன் இத்தடவை

மட்டும் அகப்படாமல் தப்பித்துக்கொள்ள முடியுமோ? சன்யாசம் தரவல்ல சற்குருவைத் தேடிவந்த பின்னர் பார்ப்போம் என்று வாயசைத்துவிட்டார். அவ்வளவுதான் அடிகளுக்கு அங்கென்ன வேலை? வாழ்விக்கவரும் வள்ளல் யார்? அவர் எங்கே? அவரைக் காண்பது எங்ஙனம்? இதுவே கேள்வி! இம்முயற்சியில் ஈடுபட்டிலந்தார்.

## சற்குரு தரிசனம்

தற்செயலாக திறவுகோல் கிடைத்துவிட்டது. காற்று வாக்கில் யாரோ பேசிக்கொண்டு சென்றவார்த்தை அசரீரியாக அமைந்தது. மானாமதுரையில் அருளானந்தவெள்ளம் பொழியும் ஜட்ஜ் ஸ்வாமிகள் பெயர் காற்றிலே மிதந்து வந்தது. காதும் கருத்தும் குளிர்ந்தது, கால் ஓட்டம் பயின்றது. நேரே மானாமதுரையம்பதி அடைந்தார். சற்குருவைத் தேடியலைந்த சீடனுக்குத் தங்க நிழல் கிடைத்து விட்டது. சற்குரு தரிசன விசேஷத்தால் அடிகளின் உள்ளம் உருகியது. கண்ணீர் பெருகக் காலில் வீழ்ந்து கரைந்தழுதார்

தனது ஞான சந்தானம இவர் தான் என்பதை சற்குரு நாதர் அறிந்து எதுவும் பேசாமல் பொதிகமலைச்சாரல் அடைந்தார். ஆத்ம தாகத்தோடு சற்குரு திருவடி தேடி வந்த கிருஷ்ணமூர்த்தி பின் தொடர்ந்து சென்றார்.

மலைஉச்சிக்குச் சென்று சுவாமிகள் ஒருவாரகாலம் நிஷ்டையில் இருந்து கண்விழித்துப் பார்க்கும்போது தன்னைப் பின் தொடர்ந்து வந்த கிருஷ்ணமூர்த்தி ஒருவாரகாலம் அன்ன ஆகாரம் இன்றி காத்திருப்பதை அறிந்தார்.

காளத்தியில் பரத்துவாஜர் தவமிருந்த குளக்கரையில் தனக்கு உபதேசமான நிலையும், தன் சீடருக்கு அகத்தியர் தவமிருந்த பொதிகை குன்றில் உபதேசம் ஆக இருக்கும் நிலையும் சுவாமி கருத்தில் நினைத்தார். குளம் இப்பொழுது குன்றாக உயரப் போகிறது என்பதை அறிந்து மகிழ்ந்தார் என்றாலும், அன்பனை சோதிக்க திட்டமிட்டு என்

நிஷ்டையை ஏன் காத்திருந்து கலைக்கின்றாய் என்று சிறு கல் எடுத்து கிருஷ்ணமூர்த்தியின் மீது வீசினார்.

எத்தனையோ கல்லடியை தாங்க இருக்கும் கிருஷ்ண மூர்த்தி, சற்குருநாதன் தன்மீது போடுகின்ற கல்லைக்கண்டு அஞ்சவில்லை, அதனை அன்புடன் அருளும் பிரசாதம் என்று நெருங்கி வந்தார்.

1900 வருடம், தமிழ் விகாரி வருடம் ஆனி மாதம் பௌர்ணமி திதியில் ஜட்ஜ் சுவாமிகள் தம் சீடராக கிருஷ்ண மூர்த்தியை ஏற்று சுயம்பிரகாசர் என்ற தீக்ஷா நாமம் வழங்கி உபதேசம் செய்வித்தார். பலநாள் உடனிருந்து அரிய உண்மைகளை சுயம்பிரகாசர் தெளிந்தார்.

ஜட்ஜ் சுவாமிகள், சீடனை அழைத்து, இல்லம் சென்று ஒருநாள் உற்றார் உறவினருடன் இருந்து, மறுநாள் அன்னையை வலம் வந்து அவதூத கோலம் தரித்து மௌன மாக யாத்திரை தொடரும்படி உத்தரவிட்டார்.

## சர்வ சங்க பரித்யாகம்

ஆன்மீக தாகம் தணிய இன்பவாரிதி சொரிந்த ஆசார்யாளின் கருணையை எண்ணி அகமகிழ்ந்து ஆனந்தத் தாண்டவமாடிப் போற்றிப் பணிந்து, கானம்பேட்டையை நோக்கி விரைந்தார். அங்கு சென்று அன்னையை வலம்வந்து பணிந்து ஒரு முகூர்த்த காலம் தாயுடனும், தமையன் மாருடன் அளவளாவியிருந்து பிறகு அங்கேயே நெகிழ்ந்த ஆடையைக் களைந்து அவதூதமும் மோனமுமடைந்தார். மூன்று தினங்கள் அவ்விடம் கழித்து உத்திரமுகமாகச் சென்று அருணாசலேச்வரன் கோயில் கொண்டெழுந்தருளி உள்ள திருவண்ணாமலையை அடைந்தார்.

அடிகளுக்கு இங்கு ஸ்ரீரமண மஹர்ஷிகளின் பரிச்யம் ஏற்பட்டது. அங்கு சில மாதங்கள் தியானத்தில் அமர்ந்து இருக்க, அடிகளின் பூர்வாசிரம பந்துக்களும், நண்பர்களும் அடிக்கடி வந்து போவதாயினர். அதை அகற்ற விரும்பி

நிவர்த்திபெற்ற இடந்தேடி, கொல்லிமலை நாடிப்புறப் பட்டார்.

## சேந்தமங்கலம் சேர்தல்

காடும் மலையும் கடந்து செல்லும் அடிகள் சேலம் வந்துற்றார். திகம்பரராகச் செல்லும் ஸ்வாமிகளைக் கண்டு இவன் யாரோ பயித்தியக்காரன் என்று உலகம் பரிகசித்து எள்ளி நகையாடியது. கல்லை விட்டெறிந்து காயம் உண்டாக்கினர் பலர். தேக மானாபிமானம்விட்டு ஆவதூதாச்ரமம் கொண்ட அடிகள் அதனைப் பொருட்படுத்தாது சரீரத்தை மறந்த நிலையினராய் திரிந்துகொண்டிருந்தகாலை, ''ஆடையின்றி அலைவது அநீதம்'' என்று போலீஸார் கைது செய்தனர். நீதிஸ்தலத்தில் விசாரணையின்போது கிருஷ்ண சாமி ஐயர் என்ற வழக்கறிஞர் அடிகளின் நிலையையும், ஹிந்து மதத்தில் அவதூதாசிரமத்தின் தன்மையையும் விளக்கிக்கூற, விடுதலை கிடைத்தது. வழக்கறிஞர் கிருஷ்ண சாமியால் போற்றப்பட்டு அவர் இல்லத்திலேயே அடிகள் சில நாள் கழித்தார்.

மீண்டும் ஸ்வாமிகள் தனது யாத்திரையைத் தொடங்கி சேந்தமங்கலம் வந்த காலத்தில் அறிஞர் பலர் கண்டு வணங்கி நின்றனர். ஸ்வாமிகள் அன்பர்களின் வேண்டுகோளுக்கிணங்கி அங்கேயே தாமதிக்கலானார்.

## சேந்தமங்கலத்தில்

இன்ப துன்பம் கடந்து பேதாபேதமகற்றி ஆனந்த வாரியில் திளைத்து அந்தர்முகமாக அருளரசு வீற்றிருந்த அண்ணலை அன்பர்கள் ஒருபுறம் போற்றித் துதித்தபோது வன்பர்களின் பங்குமட்டும் சொத்தையாகிவிடுமா என்ன? அவர்களும் தங்கள் பங்கிற்கு ஏராளமான ஹிம்சைகளைச் செய்து தங்கள் உரிமையை நிலைநாட்டத் தவறவில்லை. தொன்றுதொட்டு இயேசு, முகம்மது, சங்கரர், ராமாநுஜர் முதலிய மஹான்களை எள்ளி நகையாடி அவமதித்த உலகம் அடிகளாரை மட்டும் விட்டுவைக்குமோ!

சேந்தமங்கலத்தில் முகம்மதியர் தெரு ஒன்றும் உண்டு அக்காலத்தில் ஹிந்து முஸ்லீம் பிணக்குகளும் அவ்வப்போது நிகழும். ஸ்வாமிகள் அவதூதராய் திரிவதன் கராணமாக அவருக்கு ஏதேனும் தீங்கு நேருமோ என்று அன்பர்கள் அஞ்சினர். அவர்கள் அஞ்சியபடி கோர சம்பவம் நடந்தே விட்டது. சிவாலயம் நோக்கிச் சென்ற அடிகள் முகம்மதியர் தெருவழியே போய்க்கொண்டிருந்தார். முகம்மதியர் கண்டு கொதித்தெழுந்தனர், ''என்ன அகம்பாவம்! ஆடையின்றி கோஷாக்கள் வசிக்கும் தெருவூடுசெல்ல அவ்வளவாயிற்று?'' என்று கூறி நையப்புடைத்தனர், அண்மையிலிருந்த அன்பர்கள் அரவம் கேட்டு ஓடிவந்து அடிகளை எடுத்துச் சென்று காப்பாற்றினார்கள். அவர்கள் எவ்வளவு வேண்டியும் ஐயன் மீண்டும் அஞ்சாமல் அத்தெரு வழியே சிவாலயம் சென்றார். இதன் காரணமாக சமூகப் பிணக்கு மீண்டும் புகைந்தது.

ஒருநாள் அடிகள் ஊருக்கு வெளியே ஆலவிருக்ஷத்தின் அடியில் அமர்ந்திருந்தகாலை, துஷ்டர்கள் கல்லை விட்டு எறிந்து தொல்லை விளைவித்தனர். ஒரு கல் அடிகளின் தொண்டையில் பட்டு காயம் உண்டாக்கியது.

அத்தனை அவமரியாதைகளையும் இடையூறுகளையும் புன்முறுவலுடன் சகித்துக் கொண்டிருந்தாரேயன்றி அந்த ஊரைவிட்டு அகலவில்லை. அவர் ஏன் அகலவேண்டும்? நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம் என்ற வீர சுதந்திர சங்கநாதம் புரிந்த அருள் அன்பர் பரம்பரையில் அவதரித்தோர் அஞ்சவேண்டியதென்ன இருக்கிறது?

நாளடைவில் அன்பர்கள் கூட்டம் அதிகரித்தது. ஆகவே சலனமற்ற ஏகாந்த நிலைநாடி அடிகள் ஊருக்கு வடக்கே இரண்டு கல் தூரத்திற்கப்பாலுள்ள கொல்லிமலை சென்று மனம்போன போக்கில் அலைந்துகொண்டிருந்தார்.

*குகாலயம்*

சேந்தமங்கலத்தைச் சுற்றி குன்றுபோன்ற இடங்கள் உண்டு. சாதுக்கள் அடிக்கடி தங்கும் குன்றிற்கு சந்யாசிக் கரடு என்று பெயர். தேன்கரடு, நயனுமலைக்கரடு என்று வேறு இரண்டு கரடுகளும் உண்டு. நயினுமலைக்கரடு அடிவாரம் பிரசித்தியான சந்தை கூடும் இடம். பிரசித்தி பெற்ற விஷ்ணு ஆலயமும் உண்டு.

குகையிலிருந்து கிளம்பிய சிங்கம்போல் அடிகள் தனிக் காட்டில் திரிந்து கொண்டிருந்தார். மெய்யன்பர்கள் பலர் அடிக்கடி வந்து தரிசித்து செல்வர், அடிகளின் பெருமையைக் கேள்வியுற்றிருந்தவரும், ஹைகோர்ட் நீதிபதியாக இருந்து பென்ஷன் பெறுபவருமான வைசிய குல திலகர் ஸ்ரீ சுந்தரம் செட்டியாரவர்கள் அடிகளிடம் அடிக்கடி வந்து தரிசனம் செய்து போவார். அன்பர்கள் அடிகளாரை சந்யாசிக் கரடில் தங்கியிருக்கும்படி எவ்வளவோ வேண்டிக்கொண்டும் ஐயன் தன்னிஷைப்படி அலைந்து கொண்டிருந்தார்.

மூவாசை அறுத்த முனிபுங்கவனுக்கு பெண்ணின் பெயரால் பெரும்பழி ஒன்றும் வந்து சேர்ந்தது. மலைவாசி யான ஒரு மங்கை மாயமாய்ப் போனாளாம். தேடியலைந்த மலையாளிகள் அடிகளின் அவதூத நிலையைக் கண்டு சந்தேகித்து அவதூறு பேசி அடித்து அவமதித்தனர். அடிகள் மேலெல்லாம் ரத்தம் பீறிட்டடிக்க அமைதியோடு இருந்தார். தற்செயலாய் அங்குவந்த அதிகாரி ஒருவர் அறிவிலிகளை விரட்டி அடிகளை அழைத்துச் சென்று காயங்களை ஆற்றி உபசரித்தனுப்பினர்.

பின்னர் ஸ்வாமிகள் நிர்விகல்ப சமாதி அடையத் தீர்மானித்து ஒரு குகையில் அமருங்காலையில் அன்பர்கள் தடுத்து அழகாய் நிருமித்த ஒரு குகையில் அமர்த்தி வேண்டிய ஏற்பாடுகள் செய்வித்தனர். அடிகள் அங்கு தங்கிய பின்னர் முன்பக்கம் கட்டிடம்கட்டி நாளடைவில் ஆசிரமம் விஸ்தாரமடைந்தது. இதுவே ''குகாலயம்''. அடிகள் அங்கு தியான சமாதியில் ஆழ்ந்திருந்தார்.

அடிகள் அன்று நிஷ்டை கூடுமுன் தம்மையடுத்த அன்பர் ஒருவருக்கு ஆணையிட்டபடி கதவு பூட்டப்பட்டது. கபாடம் திறக்கக் கட்டளை எதிர்பார்த்து அன்பர் காத்திருந்தார்.

நாட்கள் நகர ஆரம்பிக்கவே ஸ்வாமிகள் பூட்டப் பட்டிருந்த செய்தியும் வெளியே பரவ ஆரம்பித்தது. இதனையறிந்த சேலம் கலெக்டர் குகையில் மனிதனைப் பூட்டுவது சட்ட விரோதமென்றும் உடனே திறக்கும் படியும் உத்தரவிட்டார். அன்பர் அசையவில்லை. அடிகளின் உத்தரவின்றி ஆலயம் திறப்பதற்கில்லையென்று மறுத்துவிட்டார். அரசாங்க அதிகாரிகள் தங்கள் இஷ்டப் படி கதவை உடைத்துப்பார்க்க அடிகள் மரக்கட்டைப்போல நீட்டிக் கிடந்ததைக்கண்டு உயிர் போயிருக்க வேண்டு மென்று தீர்மானித்து ஸ்வாமிகளை வெளியே இழுத்தெறிந் தனர். அவ்வளவில் அடிகள் பகிர்முஹப்பட்டு கண் விழித்தார். அதிகாரிகள் அஞ்சி ஐயன் பாதங்களில் வீழ்ந்து வணங்கினர். இப்பொழுது அடிகளின் உடல் வெறும் எலும்புக்கூடாயிருந்தது. அடிகள் குகை பூட்டப் பட்டிருக்கும்போதே காடுகளில் சஞ்சாரம்செய்து மீண்டும் கதவு திறக்கும் காலத்தில் உள்ளே காணப்படுவராம்.

பிரம்மானந்த நிஷ்டானு பூதியில் கலந்திருந்த சமயம் ஒன்றில் கிருஷ்ண சர்ப்பம் அடிகளைச்சுற்றி மண்டலமிட்டிருப்பதைக்கண்ட அடியார்கள் அலறிப் புடைத்து நிற்க, அடிகள் கண்விழித்துப் புன்னகை பூத்தனராம். பின்னர் அடிகள் கூறிய பிறகு அரவம் ஏகியதென்பர்.

நெஞ்சில் ஆத்ம சமத்துவம் பூத்துக்கனிந்து குலுங்கி நிற்கும் அருள் அன்பர்களிடம் எதுதான் என்ன செய்யும்! உயிரெல்லாம் ஒன்றெனக் காணும் உத்தமர்க்கென்ன பயம்!

அடிக்கடி குகையைவிட்டு வெளியேறி சிலகாலம் சஞ்சரிப்பதும் மீண்டும் குகைக்கு வருவதும் உண்டு.

## பூப்பிரதக்ஷிணம்

பின்னர் அடிகள் பூப்பிரதக்ஷிணம் செய்யக் கருதி கால் நடையாக ஆசேது ஹிமாசல பர்யந்தம் யாத்திரை புரிந்தனர். அவதூதாச்ரமியாகிய அடிகளுக்கு மூட ஜனங்களாலும் மதவாதிகளாலும் மூட வைதிகர்களாலும் இடையே ஏற்பட்ட இடுக்கண்கள் அனந்தம். இன்னல் விளைத்தோர்பெற்ற பலனும் பயங்கரமானது. அந்த விநோத திருவிளையாடல்கள் அடிகளின் ஆத்ம பலத்தை விளக்குகின்றன.

பலவிதமான அற்புத லீலைகளைப் புரிந்து கால்போனபடி அலைந்து கொண்டிருந்த அடிகள் பதினேழு வருடங்களுக்குப் பின்னர் மீண்டும் சேந்தமங்கலம் அடைந்தார்.

அடிகள் பத்ரிநாராயணத்தில் தங்கிவிட நினைத்தார். பத்ரிநாராயணத்தில் ஒருநாள் ஸ்ரீதத்தாத்ரேய குகைக் கருகில் தியான சமாதியில் ஆழ்ந்திருந்த அடிகளின் கனவிலே ஸ்ரீதத்தாத்ரேயமூர்த்தி தோன்றி தன் ஆலயப் பிரதிஷ்டை தக்ஷிண தேசத்தில் செய்விக்கக் கட்டளையிட்டனராம். ஆகவே அடிகள் திரும்பிவிட்டார்.

## தத்தகிரி

திரும்பிவந்த பின்னர் ஸ்வாமிகள் 'ஸ்ரீதத்தாத்ரேய' ஆலய பிரதிஷ்டையில் சித்தை செலுத்துவாராயினர். சர்வ சங்க பரித்யாகராய் விளங்கும் அடிகளார் ஈச்வர சங்கல்பத்துக்கு சாக்ஷிமாத்திரமாகவிருக்க விரைவில் சன்யாசிக் குன்றின் உச்சியில் தத்தாத்ரேய ஆலயப் பிரதிஷ்டையாகியது. இதுவே 'தத்தகிரி' என வழங்குகிறது.

தத்தகிரி ஆலய நிர்மாணத்திற்கு சேலம் சுந்தரம் செட்டியார், முத்தகாபட்டி மிட்டாதார் முத்தாலம்மாள், ஐயம்பாளையம் தாண்டவராயபிள்ளை திருச்சி, டவுன்

முன்சீப் கிருஷ்ணசாமிபிள்ளை, திருச்சி சேஷசாமி, சேலம் ஐயாசாமி அய்யர், ஆர். ராமய்யர் ஆகிய அன்பர்கள் பேருதவி புரிந்தார்கள்.

தத்தாத்ரேயமூர்த்தி, பிரம்ம விஷ்ணு ருத்ர ஸ்வரூபர் ஆகையினால் மதத்துவேஷத்தைப் போக்கவும் தென்னகத்தில் குருதேவராலயமின்றியிருந்த குறையை நிவர்த்திக்கவும் அக்காலத்தில் இந்தப் பிரதிஷ்டை இன்றியமையாத தாயிற்று போலும்! அவதூதரான நமது அடிகளா அவதூத பாரம்பர்யத்தின் ஆதிகுரு மூர்த்தியான தத்தாத்ரேயருக்கு ஆலயம் நிருமிக்கக் காரணமாயிருந்தது பொருத்தமும் ஏற்றமுமுடையதன்றோ!

பிரஜோத்பத்தி வருடம் வைகாசி மாதம் 16-ஆம் தேதி (29—5—31) வெள்ளிக்கிழமை உதயாதி நாழிகை 1-20க்கு மேல் 2-45க்குள் மூர்த்தி பிரதிஷ்டையும், கும்பாபிஷேகமும் சிறப்பாக நடந்தேறியது.

சுவாமிகள் பிரஜோத்பத்தி வருடம் அவதரித்தார். அடுத்த பிரஜோத்பத்தி வருடம் தத்தகிரியில் ஆலய கும்பாபிஷேகம் நடைபெற்றிருக்கிறது. அறுபதாவது வயதில் அரிய திருப்பணி செய்துமுடித்தார். அவதூத சுயம்ப்ரகாச குருமகராஜ்.

## அன்பர் குழாம்

பல இடங்களிலிருந்தும் அடிகளின் பெருமையைக் கேள்வியுற்ற அன்பர் பலர் வந்து தரிசித்தனர். சிலர் அடிகளை அடுத்து சீடராகும் பேறுபெற்றனர். சில சமயம் அடிகள் யாருக்கும் தெரியாமல் குகையைவிட்டு சென்றுவிடும் போதெல்லாம் சங்கரானந்தர் என்னும் மெய்யன்பர் அடிகள் கடிந்துகொள்வதையும் பொருட்படுத்தாது தேடிக் கண்டு பிடித்து பணிவிடை செய்தார். நாளடைவில் சங்கரானந்தர் அடிகளின் பரிபூரண கிருபைக்கும் பாத்திரரானார்.

அடிகளைக் காஞ்சியம்பதியில் தரிசித்த பின்னர் சிலகாலம் சென்றபின் அடிகளிடம் ஆசிரமம் பெற்ற நிஜானந்தர் என்ற

அன்பர் ஒருவரும் உண்டு. இவர் ஸ்வாமிகளின்பேரில் சாஸ்திர ரூபமாகவும், ஸ்தோத்ர ரூபமாகவும், அந்தாதி வெண்பாமாலை, இரட்டைமணிமாலை, நவமணிமாலை, சில சமஸ்கிருத ச்லோகங்கள் இயற்றியிருக்கிறார்.

அடிகளார் திருவரங்கத்தில் இருந்த காலத்தில் இவர்களிடம் அடிமைபூண்ட ஸ்ரீ தியாகராஜ பிள்ளை என்ற சிவஞானச் செல்வரும் குறிப்பிடத்தக்கவரே. இவரே பின்னர் ரிஷிகேசத்தில் மஹாசமாதி அடைந்தவர்.

துரியானந்தர் என்று பிரபலமாக விளங்கிய அன்பரும், பூர்வாசிரமத்தில் சிறுவயதில் ஆங்கில, வடமொழி ஞானம் பெற்று முடிவில் துறவு மார்க்கத்தில் விருப்புடையவராய் நமது அடிகளை ஆச்ரயித்து கடும் சோதனைக்குப் பின்னர் அடிகள் அருள ஆசிரமம் பெற்றார். சீடர்களோடு அடிகள் அளவளாவியிருந்த காலத்தில் அத்யாத்மக் கலை பழுத்துக் கனிந்த உபதேசக் கனிகள் பல உதிர்வதுண்டு. அவற்றை விரிவான நூல்களில் வெளியிட்டிருக்கின்றனர். தவிர சிவானந்தர், கைவல்யானந்தர் என்பவர்களும் அன்பர்கள் குழாத்தில் பிரதானமானவர். அடிகளாரின் சீடர்களாக இன்று இருப்பவர்கள் ஸ்ரீ சாந்தானந்த சற்குரு மகராஜ், ஸ்ரீ கிருஷ்ணனந்த சற்குரு மகராஜ், ஸ்ரீ சுகாநந்த சற்குரு மகராஜ் ஆகியோர் மட்டுமே.

அதோ! சுற்றிலும் சோலைப் பசுமை, நடுவிலே அமைந்துள்ள சுடர்மனை சொக்கழகாகத் திகழ்கிறது. பக்ஷி ஜாலங்களும், மிருக ஜாதிகளும், பிரகிருதியின் சௌந்தர்ய சோபையை பன்மடங்காக்குகின்றன. நீர் நிறைந்து விளங்கும் ஏரியின் நிலை இந்த யோக யோகீச்வரரின் சலனமற்ற சாஸ்வத நிலையின் பகைப் புலன்போலும் தோன்றுகிறது. இத்தகைய சுற்றுணர்ச்சியுடன் நிஷ்டைகூடி நிற்கும் அடிகளின் திருமுன் மாந்தர் யாரும் வந்து வணங்கி நிற்க குகாலயச் சோலையிலிருந்து அத்யாத்ம கீதம் முழங்குகிறது. அடிகளின் சந்நிதான தரிசன விசேஷத்தால் ஊனும், உயிரும் சிலிர்க்கிறது. உள்ளத்தில் பேரானந்த வெள்ளம் பெருகு

றது. அங்கு வீசும் தென்றலில் பிரம்ம ஞானத் திருமணம் கமழ்கிறது. இத்தகைய தவசிரேஷ்டர்கள் இந்நாட்டிலன்றி வேறெங்கு அவதரிக்கமுடியும்?

## குருபக்தி

தமக்கு ஆன்ம ஒளிகாட்டி அவதூத ஆஸ்ரமம் நல்கிய ஸ்ரீஜட்ஜ் சுவாமிகளை தெய்வமாகவே ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாசர் போற்றினார். குருவிற்குச் சமமான தெய்வமும் இல்லை. பிதாவும் இல்லை. பந்துக்களும் இல்லை குருவிற்குச் சமமான உயர்ந்த பதவியும் இல்லை. என்பதால் எப்பொழுதும் சத்குரு ஸ்மரணையிலிருந்தார்.

தன் சத்குருவைப்பற்றி யாராவது ஏதாவது சொன்னால் போதும் ஆனந்தப் பரவசராகி விடுவார். அப்பொழுது ஸ்வாமிகளைப் பார்க்கவேண்டும்!

மந்நாத ஸ்ரீஜகந்நாத: மத்குரு: ஸ்ரீஜகத்குரு: என்று அவரது குரல் எதிரொலிக்கும். குருவின் திருமுகத்தில் முகமாக இருப்பதில் பிரம்மம் விளங்குகிறது. அது குருவின் கருணையால் அடையப்படுவது. ஆண்டாள் நாச்சியாரும், மீராவும் இறைவனை இடைவிடாது எப்படித் தியானித்தார்களோ அவ்வாறு சத்குருவின் பாதார விந்தங்களை ஸ்வயம்ப்ரகாசர் தியானித்தார்.

எப்பொழுதும் தனிமையே விரும்புவார். நிஷ்டையில் இருப்பதுபோன்ற இன்பம் அவருக்கு வேறு இல்லை. சில சமயம் புறப்பட்டு நயினமலைக் கரடு பக்கம் போய்த் திரும்பு வார். வந்ததும் வாசலில் வைக்கப்பட்டிருக்கும் குடத்து நீரை தன் தலையில் தானே அபிஷேகம் செய்து கொள்ளு வார். எத்தனை குடம்நீர் இருந்தாலும் சலிக்காமல் தலையில் இட்டு மகிழ்வதிலே ஸ்வாமிக்கு அலாதியான பிரீதி.

ஜட்ஜ் ஸ்வாமிகள் புதுக்கோட்டையில் மகா சமாதி ஆனது ஸ்வாமிக்குத் தெரியாது. ஸ்வாமிக்குத் தெரிவிக்க எவரும் வரவில்லை. யோக நிஷ்டையில் அன்ன ஆகார மின்றி ஸ்வாமி கடுந்தவம் புரிந்த காலம்.

தான் சமாதி ஆனதையும், தன் தலைமேல் குப்பைமேடு குவிந்திருப்பதையும் யோக நிஷ்டையிலிருக்கும் தம் அருமைச் சீடருக்கு ஜட்ஜ் சுவாமிகள் அறிவிக்க ஸ்வயம்ப்ரகாசர் அறிந்தார்.

நிஷ்டை கலைந்து எழுந்தார். புறப்பட்டார் புதுக் கோட்டையை நோக்கி. அவதூதராகையால் ஊருக்குள் பகலில் வரமுடியவில்லை. இரவு நேரத்தில் தேடினார் தன் சற்குருநாதர் குறிப்புக் காட்டிய இடத்தில். குப்பைகளைத் தன் கையால் விலக்கினார். அகல் விளக்கு ஒன்று அங்கு ஏற்றுவித்தார். மூன்று நாள் இரவு அங்கு நிஷ்டைகூடி சற்குருநாதருக்கு அஞ்சலி செலுத்தினார்.

தான் முயற்சித்து அதிஷ்டானத்தை சீர்திருத்தி செப்பனிட்டாலும் மக்கள் முன்போல மறந்துவிட்டால் என்ன செய்வது என்று சிந்தித்தார், ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாசர்.

புதுக்கோட்டையில் வாழும் நல்லோர் இதயத்தில் சற்குருநாதன் அதிஷ்டானத்தைப் பற்றிய சிந்தனை தானாகத் தோன்றவேண்டும் என்று சங்கல்பித்துக் கொண்டார். மகான்கள் சங்கல்பித்துக்கொண்டால் அதனை நிறைவேற்ற இறைவனே இருந்து ஊக்குவான் என்பது முன்னவர்களின் அனுபவங்களாகும்.

சுவாமிகள் புதுக்கோட்டைக்கு வந்த சுவடு தெரியாமல் சேந்தமங்கலம் திரும்பினார். ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாசரின் தவ மகிமையால் சங்கல்பம் நிறைவேறும் தருணம் தானே கனிந்து எழுந்தது.

புதுக்கோட்டை முன்னாள் நீதிபதி ஸ்ரீ P. V. ரகுநாதய்யர் தலைமையில் ஒரு குழு சேந்தமங்கலம் வந்து சேர்ந்தது. ஸ்ரீ ஜட்ஜ் சுவாமிகள் புதுக்கோட்டையில் மகாசமாதி ஆனதும், அதிஷ்டானம் அமைக்கப்பட்டதும், அந்த இடம் இன்று மறைந்து நிற்பதும் தெரிவித்து இடம் காட்டி உதவ வேண்டுமென பிரார்த்தித்தார்கள்.

பிழை பொறுத்து அதிஷ்டானம் அமைந்த இடம் காட்டிஞல் இனி என்றும் மறையாமல், மறவாமல் இருக்கும் படி அதிஷ்டானத்தை அமைத்து வழிபடுவோம் என்றும் வந்தவர்கள் பிரார்த்தித்தார்கள்.

தனது சங்கல்பம் நல்ல பயனைத் தந்திருக்கிறது என்பதை அறிந்த ஸ்வயம்ப்ரகாசர் இடத்தைச் சுட்டிக் காட்டிஞர். புரியவில்லை என்ருர்கள் பக்தர்கள். தனது சீடரான ஸ்ரீசங்கரானந்தரை உடன் அனுப்பி அவருக்குச் ஸ்வாமிகள் குறிப்பும் தந்து குருபெருமான் அதிஷ்டானம் ஆன இடத்தை கண்டுபிடிக்க வகையும் தெரிவித்து அனுப்பி வைத்தார்கள்.

ஸ்ரீஸ்வயம்ப்ரகாச ஜோதி காட்டிய இடத்தில் ஸ்ரீசங்கரானந்தரும், அன்பர்களும் அதிஷ்டானம் இருக்கும் இடத்தைத்தேடி அறிந்தார்கள். அடிபீடம் சற்று விரி வாக்கப்பட்டு மண்டபம், கோபுரம் அமைக்கப்பட்டது.

அதிஷ்டானத்தின் முன்புறம் ஒரு கீற்றுக் கொட்டகை யும் போடப்பட்டது. புதுக்கோட்டை வாசிகளின் விருப்பப்படி ஸ்ரீ ஸ்வயம்ப்ராகர் சத்குருநாதர் ஆலய கும்பாபிஷேகம் நடத்திவைக்க எழுந்தருளிஞர்.

அதிஷ்டானத்தில் ஸ்வயம்ப்ரகாசர் மகாலிங்கம் பிரதிஷ்டை செய்வித்து வேத நாதமும் மங்கள இசையும் முழங்க தாது வருடம் வைகாசி மாதம் 18ம்நாள் 31—5—1936 ஞாயிற்றுக்கிழமை மகா கும்பாபிஷேகம் செய்வித்தார்.

என் குருநாதன் மகா சமாதி ஆகியிருக்கும் இவ் விடத்தில் பரிசுத்த மனதோடு நிஷ்டையில் இருப்போருக்கு சனகாதி முனிவர்களுக்கு மௌனமாக இருந்து சின்முத்திரை காட்டி உணர்த்திய தக்ஷிணமூர்த்தமேவந்து மௌனம் கலைத்து உபதேசம் புரிவார் என்று ஸ்வயம் பிரகாச முனிவர் திருவாய் மலர்ந்தருளிஞர்.

கும்பாபிஷேகம் சிறப்பாக முடிந்தது. கூடியிருந்தோர் வியக்கும் வண்ணம் சாதனங்கள் சேர்ந்தன. சேந்தமங்கலம் ஸ்வாமி மனத்தில் தயக்கம் நிறைந்த சலனம் ஒன்றும் இருந்தது. அதிஷ்டானத்தில் பூஜைக்கு தினசரி அமுது படைக்க ஒருவரைத் தேடியது உத்தம உள்ளம்.

சுவாமிகள் அவதூத ஆச்ரமம் ஏற்ற கானம்பேட்டை வாசியான சிவராமய்யர் அவர்கள் சுவாமியின் திருக்குறிப்பை அறிந்து அத்திருப்பணியைத் தாம் ஏற்றுக்கொள்வதாக அறிவித்தார். சுவாமிகள் மனம் நிறைவுபெற்றது.

அதிஷ்டானத்தில் சித்தியடைந்த மகாபுருடரோ முன்னாள் நீதிபதி. அதிஷ்டானம் உள்ள இடத்தை விலைக்கு வாங்கி உரிமைபடைத்தவரோ முன்னாள் நீதிபதி ஸ்ரீ பதுமநாப சாஸ்திரிகள். அதிஷ்டானத்தின் திருப்பணி வேலையைத் தொடங்கி முன்நின்று நடத்தியவரோ முன்னாள் நீதிபதி ஸ்ரீ P. V. ரகுநாதய்யர். மூன்று நீதிபதிகள் ஒன்று சேர்ந்து விட்டார்கள். இனி சற்குருநாதன் புகழ் பரதகண்டமெங்கும் பரவும் என்று நம்பிக்கையோடு சேந்தமங்கலத்திற்கு சுயம்ப்ரகாசர் வந்து சேர்ந்தார்.

குருநாதன் அதிஷ்டானத்தை சிறப்பிக்க தவவலிவுடைய ஒரு சற்புத்திரனைத் தேர்ந்தெடுக்க ஸ்வயம்ப்ரகாசர் சங்கல்பித்தார். நாடு பூராவும் தேடி, இமயத்திலும் தேடி, ஸ்ரீ தத்த சரண பாதுகையை சரண் அடைந்து, அருட்குரல் வழிகாட்ட ஸ்வயம்ப்ரகாச ஜோதியை நாடி ஒரு சற்புத்ரன் வந்து காத்திருந்தார். இவர் குருபக்த சிகாமணி, குரு கைங்கர்ய மாமணி, அன்னை ஸ்ரீபுவனேச்வரியை சின்னஞ்சிறு வயதுமுதல் ஜபித்து வளரும் பக்த சிகாமணியாகிய ஸ்ரீலஸ்ரீ சாந்தானந்தருக்கு ஆச்ரமம் நல்கி, அருகழைத்து உபதேசித்து புதுக்கோட்டைக்குச் சென்று சற்குருநாதர் அதிஷ்டானத்தை உயர்வுபடுத்துவாய் என்று அருளுரைகூறி அனுப்பிவைத்தார்.

புதுக்கோட்டையிலிருந்து எவர் வந்தாலும், என் சற்குருநாதரிடமிருந்துவந்த தூதுவர் என்றே மதித்து அகமகிழ்ந்து

உபசரித்து உரையாடி பிரசாதம் வழங்கிய ஸ்வயம் ப்ரகாசரது குருபக்திக்கு எதனை ஈடுகாட்டுவது! எப்படி அந்த உணர்வை சித்தரிக்கமுடியும்?

## நல்லதும் கெட்டதும்

திருக்கோடிக்காவில் அந்தணர் அவதூத ஆஸ்ரமம் வேத விதிக்கு மாறானது என்று, ஸ்வாமிகளைப் பிடித்து மொட்டையடித்துவிட்டார்கள்.

இராமநாதபுரம் நவபாஷணத் தீர்த்தக் கரையில் சிலர் ஸ்வாமிகளின் தாடிக்கு நெருப்பு வைத்தனர். அருகிலிருந்த ஒருவர் ஸ்வாமிகளை அழைத்துச் சென்று பன்னீரால் அபிஷேகம் செய்வித்தார்.

ஐயம்பாளையத்தில் ஸ்வாமிகளிடம் விலைமாதர்களை அனுப்பி ஸ்வாமிகளை மயக்கச்செய்த முயற்சி வீணாயிற்று.

லாலாபேட்டையில் மாடு மேய்க்கும் சிறுவனை படுக்க வைத்து துணியால் அவனை மூடி, ஸ்வாமி இவன் இறந்து விட்டான் எழுப்பித் தாருங்கள் என்றார்கள். ஸ்வாமி, போனவன் போனவன்தான் என்றுகூறி அப்பால் சென்று விட்டார். மூடிய துணிக்குள் சிறுவன் இறந்து கிடந்ததை ஊரார்கண்டு அச்சம் கொண்டார்கள்.

பொள்ளாச்சி அருகேயுள்ள கோமங்கலத்தில் ஸ்வாமிகளுக்கு ஜுரம் கண்டது. போக்கிரி ஒருவன் ஜுரத்துக்கு மருந்து என்று சுத்தி செய்யாத வீரத்தை இரவு நேரத்தில் கொடுத்துவிட்டான். இதனை அறிந்த சிலர் உடனே அகத்திக் கீரையும், பாகற்காயும் கொண்டுவந்து கொடுத்து உபாதை தீர்த்தனர்.

தஞ்சாவூரில் எருக்கம் பாலும், கள்ளிப் பாலும் கலந்து கொடுத்து வேடிக்கைப் பார்த்தனர். நஞ்சை அமுதென அருந்திய நாயகனைப்போல ஸ்வாமி இருப்பதைக்கண்டு நடுங்கினர் அன்னோர்.

சங்ககிரியில் போலீஸ் ஹெட் கான்ஸ்டேபிள் வெங்கிடசாமிநாயுடு தன் வீட்டுக்கு ஸ்வாமிகளை பிக்ஷைக்கு அழைத்து மாமிசம் படைக்க, ஸ்வாமி உண்ண விரும்பாததைக்கண்டு, அச்சுறுத்த, உண்ட உணவு பூராவும் வெளியில் வந்து வாந்தியெடுத்து பிளவை நோயால் போவாய் என்று சபித்து மேல்செல்ல, சில தினங்களுக்குப் பிறகு பிளவை நோயால் ஹெட்டு மரணமடைந்த வரலாறு உண்டு.

ஸ்ரீரங்கத்தில் குதிரை வண்டிக்காரர்கள் கற்களாலும், தடிகளாலும் அடித்து இம்சித்தார்கள். அடுத்தவாரம் தங்களுக்குள் ஏற்பட்ட கலகத்தால் ஒருவரை ஒருவர் அடித்துக்கொண்டு அனைவரும் சிறை சென்றார்கள்.

திருவையாற்றில் அந்தணர் ஒருவர் பிட்சைக்கு வீட்டுக்கு அழைத்துப்போய் அவ்தூதர் சுடுகாட்டில்தான் இருக்க வேண்டியவர் என்று சொன்னதும். அவருடைய வீட்டின் பின்புறமுள்ள வைக்கோல் போர் நெருப்புப்பற்றி எரிவதாக ஸ்வாமி சொல்லவும், வாயடைத்து நின்றார். வைக்கோல் போரும் எரிந்து சாம்பலாயிற்று.

மணலூர்பேட்டையில் அந்தணர் ஒருவர் அடிபணிந்து, உபதேசம் செய்ய வேண்டுமென பிரார்த்தித்தார். "ஹரே ராம ஹரே ராம, ராம ராம ஹரே, ஹரே.—ஹரே, கிருஷ்ண ஹரே கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே" என்பதை எழுதிக்கொடுத்து இதனை தினம் ஆயிரம் தடவை ஜபித்து சித்தியடைவாய். விஷ ஜுரம் ஒடும், தேள்கடி, பாம்புக்கடி பறக்கும் உன் விபூதியால், என்று கூற, அதன்படி ஜபம்செய்து சித்திபெற்றார் அவர்.

சிலர் உணவு அளிக்கும்போது அடிகளாரின் செய்கை மீனாட்சி அம்மை திருமணத்திற்குவந்த குண்டோதரன் கதையை மெய்ப்பிப்பதுபோல இருக்கும்.

அறியாத மக்கள் செய்யும் அநீதங்கள் மன்னிக்கப்படு கின்றன. விஷமத்தனமாகச் செய்யும் தீங்குகளுக்கு உடனுக் குடன் தண்டனைகள் ஏற்படுகின்றன, பெரியவர்களை

அறிந்து உபசரிப்பவர்கள் பாக்யவான்கள் ஆகிறார்கள். இப்பகுதியை நெஞ்சத்தில் நிறுத்திப் பார்ப்போமா?

## மஹாசமாதி

சேந்தமங்கலம் தத்தகிரியில் ஸ்ரீ தத்தாத்ரேயருக்கு ஆலயம் அமைத்து தென்னகத்தில் சிறப்புமிக்க செயலைச் செய்துமுடித்தார். தன் சற்குருநாதர் புகழ் விளங்க அதிஷ்டானம் அமைந்த இடத்தை அறிந்து திருக்கோயில் எழுப்பி கும்பாபிஷேகம் செய்து மகிழ்ந்தார்.

பாட்டன் சொத்து பேரனுக்கு என்பது பழமொழி. சற்குருநாதன் சேவைக்கு ஒரு சற்புத்திரனைத் தேர்ந்தெடுத்து அனுப்பியாகிவிட்டது என்ற நிம்மதியும் ஏற்பட்டுவிட்டது, சுயம்ப்ரகாசருக்கு.

தான் அனுபவித்துக்கண்ட தத்துவங்களுக்கு நுட்பமான விளக்கங்கள்கூறி பக்தர்களுக்கு விளக்கினார். அவர் தத்துவக் களஞ்சியம், உபநிஷத் பொருள்களைத் தெளிவாக விளக்கும் ஆற்றல் படைத்த நாவரசர், மோன நிலையில் தக்ஷிணாமூர்த்தியாக விளங்கும் ஞானச் செல்வர். கல்லடியும் சொல்லடியும் பட்ட அவதூதர்.

அவதூதர் ஆனபோதும் ஆலயம் தொழுத ஞானி. அவரைக்கண்டு தரிசித்தவர்கள் அகநிறைவு பெற்றார்கள். அவரது தவம் மேனியில் ஒளியுடன் பிரகாசித்தது. உட்கனல் ஏற ஏற பழுத்த பழம்போல ஸ்வாமி தோற்றம் தந்தார்கள்.

அவர்களை யாரும் கட்டுப்படுத்த முடியாது அன்பர்கள் ஓடி ஓடி உபசரிப்பார்கள். இன்பமும், துன்பமும் ஓர் கணத் தோற்றம். உபசரிப்பும், துன்புறுத்துதலும் ஒன்றே எனக் கருதிய மாதவ ஞானி அவர். ஸ்வாமி பேசுவது மெல்லிய குரலாக அமைந்து வெளிப்படும் அதிலே தெளிவு தேங்கியிருக்கும்.

சுற்றத்தார்வந்து சூழ்ந்தனர். அன்பர்களும் பக்தர்களும் வந்து திரண்டனர். தான் எடுத்த பிறவியை உதற வேண்டிய காலம் வந்தது என்பதை அறிந்தார்கள். தத்த கிரியில் தத்தாத்ரேயர் பீடத்துக்குக் கீழே முதல் மாடியில் தனக்கு மகா சமாதிக்கென இடம் அமைத்துவைத்திருந்தார்கள்.

அருகிலிருந்தோர் கைதொழ சிவ சிவா என்று அன்பர்கள் வாய் முழங்க அவதூத அருட்குழியில் 1958ம் வருடம் டிசம்பர் மாதம் 29-ம் தேதி மகாசமாதியில் ஆழ்ந்துவிட்டது. ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ஜோதி நமக்கு வழிகாட்ட கலங்கரை விளக்கமாக தத்தகிரியின் உச்சியில் நின்று விளங்குகின்றது.

தமிழகத்தில் ஒரு மாமுனிவரைக் கண்டோம். அவரது திருவடியில் வீழ்ந்து வணங்கினோம். கண்களால் அத்திரு உருவைப் பருகுகிறோம். காதுகளால் அவரது திருவாய்மொழிகளைக் கேட்டோம். அவரது அருட்பார்வை நம்மீதுபட்டது. இன்றும் சுவாமிகளின் தோற்றம் அப்படியே இருப்பதுபோல் சிலை வடிவில் காட்சி தருகிறார். அவர் கைப்பட்ட நூல் வாங்கி அவரது வாழ்க்கையை எழுதினோம் என்ற பேறு இருக்கிறது. அந்த நல்லுணர்வு நம் உள்ளத்தில் தேங்கி நின்று நம்மை என்றும் வாழ்த்தும்.

அறிவோம் நன்றாக
குரு வாழ்க
குருவே துணை

ஓம் தத் ஸத்

---



ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள்

௮

# ஸ்ரீ சற்குரு சாந்தானந்த மகராஜ் வரலாறு

### *மாநகர் செய்த மாதவம்*

உலகுக்கு உண்மையை உணர்த்தி உற்றவர்களை உய்விக்கவல்ல அருளாளர்கள் அன்றும், இன்றும் அவதாரம் செய்துதான் வருகிறார்கள். காலத்திற்கேற்ப, சூழ்நிலை மாற்றங்களுக்கு ஏற்ப, கருணை சாகரமான இறைவன் தன் தூதுவர்களாக அருளாளர்களை அவதரிக்கச்செய்து, உலகை உய்வித்து வருகிறான்.

ஆண்டவன் அடியார் உறவை பக்தவிஜயமும், பெரிய புராணமும் நமக்கு உணர்த்துகின்றன. அடியவர்பட்ட சிரமங்களை ஆண்டவனே வந்து வெளிப்படுத்தி அருள்புரியும் அற்புதச் செய்திகளைப் படித்தும், கேட்டும் உள்ளம் நெகிழாதார் யார்?

ஆண்டவன் அடியார் உறவைப்போல, அதனைவிட சற்று உயர்வுடைய, சிறப்புடைய, பாசமுடைய வரலாறு குருவும், சீடனும் கொள்ளும் உண்மை உறவாகும். தன் குருநாதனையே ஞானத் தந்தையாகக்கொண்டு, அவருடைய பாரம்பர்யமே தன்னுடைய பாரம்பர்யமாக ஏற்று மகிழும் ஞான பரம்பரை பாரத நாட்டின் பண்பாட்டில் விளைந்த ஒன்றாகும்.

தத்தகுருநாதர் பாரம்பர்யம் தமிழகத்திலே நின்று நிலைக்க, திரியம்பக மலையிலிருந்து தொடங்கும் கோதாவரி தீரத்திலே அவதரித்த ஜட்ஜ் ஸ்வாமிகள் எனப்படும்

ஸ்ரீஸதாசிவ ப்ரம்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் என்ற கருணசாகரம் புதுக்கோட்டை பூமியில்வந்து நிலைபெற்றது.

தென்பெண்ணை தீரத்திலே கல்பட்டு என்ற சிற்றூரில் தோன்றிய ஸ்ரீஸ்வயம்ப்ரகாச ஜோதி புதுக்கோட்டைக்கு வந்து புதுவாழ்வுபெற்று ஜட்ஜ் ஸ்வாமிகளின் சீடராகி புதுக்கோட்டை அதிஷ்டானத்தை உள்ளொளியால் அறிந்து அதிஷ்டானம் அமைத்து குடமுழுக்கும் ஆற்றி, சேந்தமங்கலத்தில் குடமுழுக்கும் ஆற்றி, சேந்தமங்கலத்தில் குன்றின்மேலிட்ட விளக்காக நின்று ஒளிர்கின்றது.

இந்த இருபெரு அவதூத பாரம்பர்யத்தின் தூண்டா மணிவிளக்காய் குரு கைங்கர்ய சிகாமணியாய், வேத ரக்ஷக வித்தகராய், மாபெரும் வேள்விகள் இயற்றும் மாதவராய், நடமாடும் புவனேச்வரியாக, சந்ததமும், தன் சத்குருநாதன் தாளில் ஸ்மரணை உடைய தவசீலராக, புரட்சிக்கனல் விளைத்த ஸ்ரீராமானுஜருக்குப் பின்னல் புதுமை போதிக்கும் போதகராக, தமிழகத்தில் அவதரித்திருக்கின்ற ஒரு உன்னதமான அவதார புருஷரின் வரலாற்றினையும் நாம் அறியவேண்டாமா?

## மணியோசை

அன்னை மீனுக்ஷி அருளாட்சி செய்கிருள் மாமதுரை நகரில். திருக்கயிலையில் தவவேடம் தரித்திருக்கும் சிவ பெருமான் சுந்தர ரூபத்துடன், மணக்கோலத்துடன் அன்னை மீனுக்ஷியை மணக்க விரும்புகிருர். சிவமே புறப்படும்போது குபேரனும் கூடவே வருகிருன். சிவ கணங்களும் வந்துசேர திருமணம் நடைபெறுகிறது. சிவபெருமான் சுந்தர பாண்டியனுகித் தென்னுட்டுக்குச் சிவமாக நின்று விளங்குகிருர்.

எல்லா நதிகளையும்போல வைகை நதி கடலில் சங்கமிப்பது இல்லை, இராமநாதபுரம் பெரிய ஏரியோடு நின்றுவிடுகிறது. கடலில் சங்கமிக்காத நதி நதியல்ல என்பது மரபு.

வைகை நதியின் நீரைப் பருகி மகிழ்ந்த ஒரு தமிழ்ப் புலவன் காதில் இந்தக் குறைவிழுந்தது. வைகை நதி ஏன் கடலில் சங்கமிப்பது இல்லை தெரியுமா? எங்கள் இறைவி மீனாட்சியல்லவா? அவளுக்கு நாயகனாக வந்தவர் சிவபெருமான் அல்லவா? திருப்பாற்கடல் கடைந்தபோது விஷ்ணுவுக்கு மங்கை மகாலக்ஷ்மியை வழங்கிய கடல். எங்கள் மாப்பிள்ளை சிவபெருமானுக்கு நஞ்சையல்லவா வழங்கியது ஆகையால் சிற்றமடைந்த எங்கள் வைகை நதி,

''நாரி இடபாகருக்கு நஞ்சளித்த பாவியென்று
வாரி இடம்போகாத வைகை''

என்று ஒரு அற்புதமான விளக்கம் தந்தார். இத்தகைய எத்தனை எத்தனையோ சிறப்புகள் நிறைந்தது மதுரையம்பதி. சிவபெருமான் அறுபத்துநான்கு திருவிளையாடல் ஆடிக்களித்த க்ஷேத்ரம் மதுரையம்பதி.

மதுரை மாநகருக்கு அருகே குபேரன்வாழ் பட்டினத்தின் பெயரைத் தாங்கியது ஒரு சிற்றூர். அச்சிற்றூரில் ஓர் அந்தணக் குடும்பம். பிரபு ராமச்சந்திரமூர்த்தியை ''ராமசாமி'' என்று அழைப்பதும் நம் மரபுதானே. ஸ்ரீராமசாமியும் அவரது யோகசக்தியும் ஒரு சத்காரியத்தைச் செய்துமுடிக்க எழுந்தருளியதுபோல அந்த இல்லறம் அமைந்திருந்தது.

அங்கயற்கண் அம்மை அருள்பெற்ற மகான் மாயாண்டி யோகி ஒரு நாள் அந்த அந்தண குடும்பத்தின் இல்லத்திற்கு எழுந்தருளினார்கள். தம்பதிகளால் உபசரிக்கப்பெற்றதும் மகான் மாயாண்டியோகி ஒன்பது குழந்தைகளைப் பெற்ற ஒப்பற்ற தம்பதிகளே! உங்கள் வயிற்றில் பத்தாவதாக

பாலகன் ஒருவன் பிறக்கப்போகிறான் அவன் வேதவித்து; வேள்விக்கரசு; ஞானபானு; ஜடாதாரி; சத்குரு கைங்கர்ய சிகாமணி, உலக க்ஷேமத்தைக் கருதும் கர்மயோகி, அன்னை புவனேச்வரியின் அருள்பெற்று புவிபோற்றும் குருநாதன். அவனுக்கு சுப்ரமண்யம் என்று பெயர் சூட்டுங்கள். அவன் குழந்தையாக இருக்கும்வரை உங்களுக்குச் சொந்தம். அதன் பின் அவன் உலகுக்குச் சொந்தம். ஆதிசங்கரனைப் பிரிந்த ஆரியாம்பாளைப்போல சின்னஞ்சிறு வயதிலே உங்களைவிட்டுப் பிரிந்துவிடுவான். அந்த மகாஞானி பிறப்பதற்கு நீங்கள் கருவிகளாக இருப்பதனுல் உங்களுக்கு நற்பேறு தானே வந்து எய்தும். புத்ர பாசம் விடுத்து உளநிறைவோடு ஞானப் பரம்பரை வளர உலகுக்கு அவனை வழங்க முன்றிவிருந்தே உறுதிபெறுவீர்களாக என்று ரகசியம்கூறி ஆசிவழங்கி மறைந்தார்.

## சுப்ரமண்யோம்

இன்றைக்கு அறுபது ஆண்டுகளுக்கு முன்பு நல்ல சுபதினத்தில் மகாயோகியின் அருள்வாக்கின்படி ஸர்வ லக்ஷணங்களும் நிறைந்த ஒரு புத்ரன் அந்தக் குடும்பத்தில் பத்தாவது குழந்தையாகவந்து பிறந்தான். பெற்றவர்கள் உள்ளம் பூரித்தது. பேரன்பும் பெருமிதம் உடன் குழந்தையை வளர்த்தார்கள். பிரியவேண்டுமே என்ற பாசவுணர்வு எதிர் வந்தபோதும் மகான் மாயாண்டி யோகியின் ஆசி மனதில் பதிந்ததால் சோகத்தை மறந்தார்கள். சுப்ரமண்யம் என்று திருநாமம் சூட்டி மகிழ்ந்தார்கள்.

குழந்தை பிறப்பதற்கு முன்பே ''சுப்ரமண்யம்'' என்ற திருநாமம் மாயாண்டி யோகி ஏன் சூட்டச் சொன்னுர் என்ற ரகசியம் நாம் அறிவோமா என்ன? தந்தைக்கு உபதேசித்த சற்குருநாதன் முருகப்பெருமான். தானே ஞானமாக விளங்கும் ஞான சொரூபன் முருகப்பெருமான். வேள்விக்கு நாயகன் முருகப்பெருமான். அக்னி வடிவமாக விளங்குபவன் முருகப்பெருமான். தேவசேனுபதி முருகப்பெருமான்,

ஆறுபடைவீடு அமைத்து அருள்பாலிக்கும் அண்ணல் முருகப் பெருமான். தாய் தந்தையரை முன்னிருத்தி தனிவழிபாடு நடத்தி தனிச்சிறப்பு அடைந்த பிரான் முருகன். இந்தப் பெயர் தரித்த குழந்தை பிற்காலத்தில் செய்யப்போகும் நற்காரியங்களுக்குச் சுப சூசகமாகவே இந்த திருப்பெயர் சூட்டப்படுகிறதா என்பதைப் பின்னல் சிந்திப்போம். பிறப்பதற்கு முன்பே சுப்ரமண்யம் பெயர்பெற்ற பெருமான் வரலாறும் விளக்குவதாகவேதானே அமையும்?

பள்ளிக்குச் செல்லும் வயது வந்தது. பெற்றோர்கள் பாலகனைப் பள்ளியில் சேர்த்தனர். எதனைச் சொல்லிக் கொடுத்தாலும் உடனே மனப்பாடம் ஆகிவிடும் பள்ளிக் கூடத்தில் ஒய்வு கிடைக்கும்போதெல்லாம் அன்னை மீனாக்ஷியின் ஆலயமே பிரார்த்தனைக்கூடமாக சுப்ரமண்யத் திற்கு அமைந்தது. கல்வி முற்பிறவியில் கற்றாயிற்று. பூரணத்துவம் பெற்றெடுத்த பிறவி இது. அதற்கு வேண்டிய அருள்பெற, ஆசிபெற, அலை தாவியது சுப்ரமண்யத்தின் அன்பு உள்ளம்.

## இதற்காக வந்தவன் அல்லவே!

மகான் மாயாண்டி யோகி, சுப்ரமண்யத்தின் இல்லத் திற்கு மீண்டும் எழுந்தருளினார். பாலகனைக் கண்டார். உச்சி மோந்தார். உனக்கு என்னத்துக்கடா இந்தப் படிப்பு? இந்தப் படிப்புப் படிக்க நீ பிறந்தவன் அல்லவே. உன் சொந்தப் படிப்பைப் தேடு. பின் ஓடிவா என்றுகூறி மறைந்தார்.

மகானின் அருள்வாக்கைக் கேட்ட பெற்றோர் சுப்ரமண்யத்தை வேத அத்யயனம் செய்யவேண்டி காரைக்குடி நாகநாதபுரம் வேத பாடசாலையில் சேர்த்தனர். கிருஷ்ணயஜுர் வேதம் அத்யயனம் தொடங்கப்பெற்றது. முறையாக கற்கவேண்டிய அனைத்தும் கற்றார் சுப்ரமண்யம்.

## உள்ளமே ஒரு பாடசாலை

மக்கள் மனதில் தெய்வ பக்தியும், தேச பக்தியும், நிறைந்திருந்த காலம். பாடசாலைப் படிப்பு வேதம் பயில வைத்தது. உலகமே பாடசாலையாக, உயர் ஞானமே பாடப் புத்தகங்களாக, உயர்ந்த ஆன்ம சொருபமே அறியும் அறிவாக அறிந்த மேலோருக்கு பாடசாலைக்குச் செல்வதும், படிப்புத் தொடங்குவதும் ஒரு சம்பிரதாயச் சடங்கே தவிர முன் ஜன்மாவில் கற்ற கல்வி முற்றுப்பெற எடுத்த பிறவி படைத்த மகான்களுக்கு உள்ளமே பாடசாலையாக அந்தராத்மாவே ஞானபண்டிதனாக ஆத்ம ஞானத்தைப் போதித்துவிடாதா என்ன?

## தேச பக்தியும், சிறைவாசமும்

சுப்ரமண்யம் வேதம் பயின்றார். ப்ரம்மச்சாரிய ஆச்ரமம் மேற்றார். நாடு பூராவும் சுற்றி நல்லனுபவம் பெறவேண்டிய காலம். அன்னை நாட்டின் விடுதலைக்காக அண்ணல் மகாத்மாவின் தேசோபதேசம் கேட்டார். தீவிர தேச சேவையில் ஈடுபட்டார். கிராம புனருத்தாரணம், எளியவர்களுக்குச் சேவை இவை இதயத்தில் இடம்பெற்றன.

தேச பக்தர்களுக்குக் கிடைத்த பரிசு சிறைவாசமே. இளைஞர் சுப்ரமண்யம் அலிபுரம் சிறையில் அடைக்கப் பெற்றார். அது ஒரு சுப சூசகமே. அங்கு அருந்தவம் தொடங்கியது. வீரசிவாஜியின் சுதந்திர ஆவேச வரலாறும் வேதாந்த கேசரி விவேகானந்த ஸ்வாமியின் ஆழ்ந்த ஞானக் கருத்துக்களும் அன்னை நாடே அற்புதத் தெய்வம் என்று உணரவைத்தன.

## சிறைச்சாலையே தவச்சாலை

அன்புக்கு அரசன் அப்பரடிகள் வாழ்க்கை வரலாறும், அவர்தம் சேவைச் சிறப்பும் சுப்ரமண்யத்திற்குப் பாடமாயின,

மகான் அரவிந்தர், லோகமான்ய பாலகங்காதர திலகர், மகாத்மாஜீ போன்ற தேசபக்தர்களுக்குச் சிறைச்சாலையே தவச்சாலையாக மாறியதுபோல இளைஞர் சுப்ரமண்யத்திற்கும் சிறைச்சாலையே தவச்சாலையாகத் திகழ்ந்தது.

தேச பக்தர்களான சுப்ரமண்ய பாரதியும், சுப்ரமண்ய சிவாவும் தமிழகத்தின் விடுதலைக்கு வழிகாட்டிகள். மூன்றாவதாக பிரம்மசாரி சுப்ரமண்யமும் அலிபுரம் சிறையில் அன்னை நாட்டின் விடுதலைக்கு அருந்தவம் பூண்டு உள்ளம் உறுதி படைத்து வந்தார்.

சிறையிலிருந்து விடுதலையாகிவிட்டது. எங்கே செல்வது? இனி செய்யவேண்டிய பணியாது? பிறப்பின் உட்பொருள் அறிந்து அதற்கு உழைக்கவேண்டாமா? உலகன்னை மீனாக்ஷி யின் ஆலயம் நோக்கி விடுதலை அடைந்த பறவை பறந்து வருகிறது. அன்னை மீனாக்ஷியின் சன்னிதியில் அடிபணிந்து தனக்கு வழிகாட்டவேண்டும் என அந்த உறுதிபடைத்த உள்ளம் பிரார்த்தனை செய்தது.

எல்லாம்வல்ல சித்தர் சன்னிதியில் மகான் மாயாண்டி யோகி அமர்ந்து தியானத்தில் நிலைத்திருக்கிறார். எதிரே பிரம்மசாரி சுப்ரமண்யம் அடக்கமாக அமர்ந்து அவரது தோற்றத்தை உள்ளத்தில் பதித்து அசைவற்று வீற்றிருக்கிறார்.

கல்லாலின் அடியில் இளைஞராக தக்ஷிணாமூர்த்தம் வீற்று இருப்பதும், வயது முதிர்ந்த சனகாதி முனிவர்கள் நால்வரும் எம்பெருமான்முன் அடக்கமாக வீற்றிருந்து சின்முத்ரா ஞானம் பெறுவதும் ஒரு காக்ஷி. இங்கே வயது முதிர்ந்த மகாயோகியின்முன் பிரம்மசாரி சுப்ரமணியம் அமர்ந்து இருக்கும் காக்ஷி. தேசாவேசம் நிறைந்த இளைஞர் உள்ளம் அமைதிபெறுகிறது.

தியானம் கலைந்து எழுந்ததும் மகாயோகி இளைஞர் சுப்ரமண்யத்தைக்கண்டு எல்லையிலா ஆனந்தமடைகிறார். பாடசாலை அறிவும், உலக அறிவும் கற்றுவந்தாயா? ஓடிவா

மகனே ஓடிவா என்றேனே. ஓடிவந்தாயா இன்று. வா மகனே வா. வையகம் வாழ, மாமறை வாழ, வேதஞானம் செழிக்க வேள்வி மல்கி அருள் சுரக்க அவதரித்திருக்கும் அருட்சுடரே! வா. உன்னால் புவனேச்வரியின் புகழ் தமிழகத்தே பரவி, மக்கள் அவள் அருளைப் பெறவிருக்கிறார்கள். அன்னை புவனேச்வரியின் மூலமந்த்ரம் இது என்று ஓரெழுத்தினை (ஏகாக்ஷரம்) உபதேசித்து, இதனை இடைவிடாமல் ஜபித்து, சித்த ஜயம் பெற்று சிறப்புப்பய்துவாயாக; வாய் மூடி மௌனியாக வாழ்வாயாக. கரதல பிக்ஷையேற்றுத் திரிவாயாக. ஓரிடத்தில் தங்காதே. ஓடு ஓடு; நீ வந்த காரியம் முடிக்க ஓடு என்று ஆசீர்வதித்தார்.

சற்குருநாதன் சரணகமலத்தில் பணிந்து, தனக்குச் சீதனமாகக் கிடைத்த அன்னை புவனேச்வரியின் மூலமந்த்ரத்தை ஜபித்து சித்திபெற மௌன விரதமேற்று தனி இடம் நாடிச் சென்றார் பிரம்மசாரி சுப்ரமண்யம்.

## காடும் மேடும்-கடுந்தவம்

திருநெல்வேலி மாவட்டம் அகஸ்திய மலைக்கூடம், திருக் குற்றாலம் சண்பகாதேவி அருவிக்கு அருகிலுள்ள குகை அலைவாயில் அண்ணல் சன்னதிக்கு சமீபமுள்ள காற்றாடி மண்டபம், திருக்குறுங்குடிமலை, திருப்பதியின் தீர்த்தக்கரை, தும்புரு தீர்த்தக்கரை, திருப்பதி திருக்கோயில் உட்பிராகாரம் நெல்லையப்பர் திருக்கோயில் ஆறுமுகஸ்வாமி சந்நிதி, பழனி மலை, கொல்லிமலை, வெள்ளியங்கிரி ஆகிய இடங்களில் அன்னையின் ஏகாக்ஷரத்தை மௌனமாக இருந்து ஜபித்தும் கரதல பிக்ஷையேற்றும் தவக்கனல் ஏற்றுவித்தார், பால யோகி சுப்ரமண்யம்.

பல வருடங்களுக்கு முன்பு சாமியார் வேடத்தில் பிள்ளை பிடிப்பவர்கள் வருகிறார்கள் என்ற பீதிநிறைந்த அவச்சேதி கேட்டு அறியாத தனத்தால் பாலயோகி சுப்ரமண்யத்தை அடித்துப் புடைத்ததும் உண்டு. எத்தனை துன்பங்கள்

சோதனைகள் வந்தாலும் மௌனம் கலையாது. வந்ததை ஏற்று இந்த உறுதிபடைத்த பாலயோகி சுப்ரமண்யத்தை போலீஸில் ஒப்புவித்தலும் அவர்கள் வைத்திருந்து விடுதலை செய்த சம்பவங்களும் ஏற்பட்டிருக்கிறன.

தென்னாடு எங்கும் கரதலபிட்சை ஏற்றும் குகைகளிலும், இறைவன் சன்னதியிலும் அமர்ந்து தியானத்தில் இருந்தும் திடசித்தமும் லட்சிய வெறியும் படைத்த பாலயோகி சுப்ரமண்யம் பைராகிகளுடன் சேர்ந்து வடபாரதத்தை நோக்கி தன் புனித யாத்திரையைத் தொடங்கினார்.

## உத்தராயணம்

கன்யாகுமரியிலிருந்து புறப்பட்டு பத்ரி, கேதார், நேபாளம், ரிஷிகேசம் ஆகிய இடங்களில் அருந்தவம் மேற்கொண்டார் சுப்ரமண்யம். ரிஷிகேசத்தில் ஸ்வாமி சிவானந்த மகராஜ் ஆஸ்ரமத்தில் தங்கி சுவாமிகளுக்குக் கைங்கரியம் செய்யும் பாக்யமும் பெற்றார்.

ப்ரம்மச்சாரியாகவும் வேதாந்த மார்க்கத்தில் நாட்டமும் தியானத்தில் ஆழ்ந்திருக்கும் சிறப்பும்பெற்ற சுப்ரமண்யத்தை சீடராக அடையப் பலர் முயன்றார்கள். தன் குருநாதனைத் தேடுகிறார், தேடுகிறார் சுப்ரமண்யம். காடும், மேடும், மலையும், மடுவும், தீர்த்தக் கரையும், திருக்கோயிலும் அவர் தேடும் இடங்களாயின.

முன்பொரு சமயம் திருநெல்வேலி நெல்லையப்பர் திருக்கோயிலில் ஆறுமுகவன் சன்னதியில் ஸித்தாசனம்போட்டு தலையைத் தரையில் இடித்த வண்ணம் தியானம் மேற்கொண்டபோது ஒரு அவதூதர் தோன்றி ''என் இடம் தேடிவா !'' என்று அழைத்த குரல் கேட்டு எழுந்து வந்தார். எதிரே எவருமில்லை. மீண்டும் மீண்டும் அந்தக் குரல் அழைத்துக் கொண்டிருக்கிறது. எங்கே இருக்கிறார் என்னை ஆளாக்கும் குருநாதன் என்று ஏங்கித் தேடுகிறது அந்த இளைஞரின் தபோபலம் கிடைத்த உள்ளம்.

## ஸ்ரீ தத்தபாதுகா பீடம்

அவதூதர்களின் மூலவர் ஸ்ரீ தத்தாத்ரேயர் குஜராத் ஸமீபம் கிரிநார் என்னும் மலையின் மேலுள்ள ஸ்ரீ தத்த பாதுகா பீடத்தை தரிசிக்க மகாயோகிகளும், ஞானிகளும் ஆவல் கொள்வது வழக்கம்.

பாலயோகி சுப்ரமண்யத்தின் உள்ளம் கிரிநார் ஸ்ரீ தத்த பாதுகா பீடத்தைத் தரிசிக்க விரும்பியது. அவதூத ஆச்ரமம் ஏற்றுக்கொண்டதும் முதலில் கிரிநார் சென்று ஸ்ரீ தத்த பாதுகா பீடத்தைத் தரிசிப்பது அவதூத சம்பிரதாயமாக இருந்துவருகிறது. இப்பொழுது அதிலே ஒரு திருப்பம். தரிசனமான பிறகு ஆச்ரமம் மேற்கொள்ளப் போகிறார் நமது சுப்ரமண்யம். ஆண்டவன் சித்தம் யார் அறிவார்? அவனன்றோ சூத்ரதாரி!

கிரிநார் மலையடிவாரம் வந்து சேர்ந்தார் யோகி சுப்ரமண்யம். வனவிலங்குகள் நிறைந்த மலைப்பிரதேசம். எவரும் தனித்துச்செல்ல அஞ்சும் பயங்கரக் காடு. அது மட்டும் அல்ல. மலையின் முகட்டிற்குச் செல்ல பத்தாயிரம் படியேறியாகவேண்டும். இங்குவந்து சேர்ந்ததும் உடல் நலம் பாதிக்கப்பட்டது. படியேறிச்செல்ல உடல்நிலை இடம் கொடுக்கவில்லை. தயங்கினார் சுப்ரமண்யம்.

அப்போது அங்கு ஒரு மகான் பிரசன்னமானார். "ஏ மதராஸி ஸாது நீ ஏன் இங்கு வந்தாய். மேலே உள்ள தத்தகுரு உன் குருநாதன் கூடவே இருக்கிறாரே. எதற்காகக் கஷ்டப்படுகிறாய்" என்று அன்புடன் ஆசிகூறி, கையில் ஒரு மாத்திரையைக்கொடுத்து, "இதனை வாயில் அடக்கிக்கொண்டு மலைமீது ஏறு" என்று ஆசி நல்கி மறைந்தார்.

## அதிசயக் குளிகை

அப்பர் ஸ்வாமிகளுக்குக் கட்டமுது வழங்கிய அண்ணலைப்போல, அபார ஆற்றல் படைத்த குளிகையை

வழங்கிய அன்னை யார்? அவர் எங்கே சென்ருர்? எப்படி மறைந்தார்? யார் அறிவார் அவன் திருவுள்ளம்.

அந்த மகாத்மா கொடுத்த குளிகையை வாயில் அடக்கிக் கொண்டதும் உடம்பு கனம் அற்றது. உள்ளத்திலே ஊக்கமும் வேகமும் பிறந்தது. தேகத்திலே திடம் ஏற்பட்டது. பல ஆயிரம் படியேறி அவதூதகுரு க்ஷேத்ர மான ஸ்ரீதத்த பாதுகாபீடத்தின் தரிசனம் கிடைத்தது. மன மகிழ்வும், நிறைவும் உடன் தியானத்தில் அமர்ந்த போது ''உன்னை ஆட்கொள்ளும் குருநாதன் சேலம் ஜில்லா, சேந்தமங்கலத்தில் உன் வரவை நோக்கி காத்திருக்கிருர். இனி தாமதியாதே, விரைந்துசெல்'' என்ற கட்டளை பிறந்தது. ஆதிகுருநாதன் ஆசியென மகிழ்ந்து மலையடிவாரம் வந்து சேர்ந்தார் சுப்ரமண்ய யோகி.

தாயைத்தேடி ஓடிவரும் கன்றைப்போல, சமுத்திரத்தைத்தேடி ஓடிவரும் நதியைப்போல, தன்னை ஆட்கொள்ளப்போகும் அருட்ஜோதி ஸ்வயம்ப்ரகாசத்தை நாடி பாலயோகி சுப்ரமண்யம் பறவைபோல பறந்து வருகிருர். ஓடி வருகிருர்.

## சத்குருவைத் தேடி

சேலம் மாவட்டம் நாமக்கல்லுக்கு அருகில் உள்ளது சேந்தமங்கலம். சன்யாசிக்கரடு என்று மக்களால் அழைக்கப் படும் குன்றில் ஸ்ரீமத் ஸ்வயம்ப்ரகாச ப்ரம்மேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள், ஸ்ரீ தத்தாத்ரேயர் திருக்கோயில் அமைத்துத் தென்னகத்தில் தத்தாத்ரேயர் பரம்பரையை வளர்த்து அருட்சாம்ராட்டாக சீடர்கள் புடைசூழ தவ வாழ்க்கை மேற்கொண்டிருக்கிருர்.

புதுக்கோட்டையில் தனது குருநாதர் ஜட்ஜ் ஸ்வாமிகள் அதிஷ்டானத்தை தக்கபடி அபிவிருத்தி செய்து கண்டுகளிக்க

வேண்டும் என்பது ஸ்வயம்ப்ரகாசருடைய லக்ஷியம். புதுக் கோட்டை நகரை பொன்னகராக்க இருக்கும் சாது. வேத சாஸ்திரம் அறிந்து. தியானக் கலையில் தேர்ந்து. ஸ்ரீ தத்த பாதுகை தரிசனமும் பெற்றவனை தான் ஆட்கொள்ளப் பல தடவை அழைப்புவிடுத்தும் இடம் தெரியாமல் தயங்குகிறானே என்று சேந்தமங்கலத்திற்கு வா என்று கட்டளையிட்டு விட்டோம் இனி ஓடோடி வந்துவிடுவான் என்று அமைதியும் அடைந்தார்.

எங்கிலும் சுற்றி ரெங்கனைச் சேவி என்பதுபோலத் தன்னை ஆட்கொள்ளப்போகும் சற்குருநாதரை நாடெல்லாம் தேடி, காடெல்லாம் தேடி ஞான குருவைத் தேடி சேந்தமங்கலம் வந்து சேர்ந்தார் சுப்ரமண்யம்.

இளம்பிராயத்தில் நெல்லையப்பர் கோயிலில் தியானத்தில் இருந்தபோது ''என்னைத் தேடிவா'' என்று அழைத்த அன்பு உருவம் எதிரே வீற்றிருப்பதை அறிந்து தரையில் வீழ்ந்து வணங்கித் தன்னை ஆட்கொண்டு அருள்புரியவேண்டுமென விண்ணப்பித்தார். இன்றோடு இந்தப் பிறவியில், பிறப்பதற்கு முன்பே மகாயோகி மாயாண்டி முனிவர் வைத்த பெயர் மறையப் போகிறது. ப்ரம்மச்சர்ய ஆச்ரமம் முடிவடையப் போகிறது. ஸ்வயம்ப்ரகாசரின் ஆத்ம கோசத்தில் உதித்த புத்ரனாகப் போகிறார். தத்த சம்பிரதாயத்தின் தனிக்கொடியாய் புதிய நாமமும், பொலிவும் பெற்றுத் திகழப்போகிறார் தமது சுப்ரமண்யம் என்பதால் இந்த இனிய நாமாவை நாமும் வேதம் முழங்குவதுபோல சுப்ரஹ்மண்யோம்-சுப்ரஹ்மண்யோம்-சுப்ரஹ்மண்யோம் என்று முழங்குவோம்.

## ஸ்ரீ சாந்தானந்தர் ஆனார்

சேந்தமங்கலம் தத்தகிரியில் அன்று உதயத்திலேயே உற்சாகம் அலைவருக்கும். தமிழகத்திலே புதிய சம்பிரதாயம் சுடர்விட்டுப் பிரகாசிக்கப் போகிறது என்று அருணனும் தன் இளங்கதிர் பரப்பி எழுந்து வருகிறான். அன்று கும்பகோணத்தில் மகாமகம். கும்பகோணத்திற்கு எழுந்தருளிய நதிகள்

அன்பர்களுக்கு அருள்சுரந்துவிட்டு சேந்தமங்கலத்தை நோக்கி விரைந்து வருகின்றன்:

அவதூத சாம்ராட் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச ப்ரம்மேந்த்ர ஸரஸ்வதி சுவாமிகளின்முன் சுப்ரமண்யம் அமர்ந்திருக்கிறர். தத்த சம்பிரதாயப்படி சடங்குகள் நடக்கின்றன. உபதேச கட்டம் முடிந்து, சாந்தானந்தா என்ற தீக்ஷா நாமம் வழங்கி ஆசீர்வதிக்கின்றர் ஸ்ரீஸ்வயம்ப்ரகாசர். அவதூதர்களுக்கு அடையானம் ஜடாமுடி, நிர்வாணம். இந்தக் காலத்தில் அறியாத மக்கள் அவதூதர்களை இம்சிப்பதால் வஸ்திரம் தரித்துக்கொள்ளுமாறு குருவின் கட்டளை பிறக்கிறது. தன் குருநாதன் திருவடிக் கமலங்களில் விழ்ந்து வணங்கிய சீடரைத் தம் தவப்புதல்வர்போல் உச்சிமுகர்ந்து ஆசீர்வதிக் கிறர் ஸ்வயம்ப்ரகாச மாமுனி.

## ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாசர் உபதேசம்

குழந்தாய்! வேதப் பயிற்சி பெற்றாய். தியான சமாதி நிலையும் பெற்றாய். நாடெல்லாம் சுற்றி நல்லனுபவம் பெற்றாய். நற்காரியம் ஒன்றினுக்கு உன்னை ஈடுபடுத்த என் தவ உள்ளம் விரும்புகிறது. உலகத்திலே எனக்கு இருக்கும் ஒரே கடமை குரு கைங்கர்யம்தான். என் குருநாதனுக்குச் சமமானவர் எவருமே இல்லை. அந்த உத்தமருடைய அதிஷ்டானம் புதுக்கோட்டையில் இருக்கிறது. அதனைப் பொலிவுறச் செய்து குரு கைங்கர்ய சிகாமணியாய் வாழ்வாயாக என்று ஆசீர்வதித்தார்.

ஒரு வருடம் கடினமான மௌனம் மேற்கொள். கரதல பிக்ஷ: தருதலவாஸ: என்ற சன்யாஸ தர்மத்தை மேற் கொள் எவரிடமும் எதையும் கேட்காதே. குருநாதன் சன்னதியில் இது நடைபெற வேண்டுமென சங்கல்பம் செய்துகொள் உனது சங்கல்பம் நிறைவுபெறும். உன்னுல்

தந்த பாரம்பரியம் உயர்வும், மகத்துவமும் அடையுமென்று ஆசிகூறி புதுக்கோட்டை அதிஷ்டானத்தின் பொறுப்பைக் கொடுத்து அனுப்பிவைத்தார் ஸ்ரீஸ்வயம்ப்ரகாசர்.

## நவசாலபுரி விஜயம்

இன்று புதுக்கோட்டையில் அதிஷ்டானம் இருக்குமிடம் நல்ல வேப்பந்தோப்பு. ஊருக்கு ஒதுக்குப்புறம். அதிஷ்டானத்தின்மீது ஸ்வயம்ப்ரகாசர் எழுப்பிய கோபுரம். எதிரே ஒரு ஓலைக் கொட்டகை. இதுவே அன்று இருந்த அமைப்பும் நிலையுமாகும்.

சாந்தானந்தர் புதுக்கோட்டை அதிஷ்டானத்திற்கு வந்து சேர்ந்தார். தமது பரம குருவின் அதிஷ்டானத்தில் தன் வாழ்க்கையை பிணைந்திருப்பதை அறிந்து நமஸ்கரித்தார். மௌன விரதம் ஒரு வருடம் எவரிடமும் பேசக் கூடாது. இரவு பகல் அதிஷ்டானத்திலே தங்கினார். பசி எடுத்தபோது வேப்பிலையின் கொழுந்தே உணவாயிற்று.

மழைக்கும் வெயிலுக்கும் மரத்தடியே இல்லமாயிற்று. ''தருநிழலே இல்லமென தாம் வாழ்பவரே யதி. தன் கரமே உணவுக்கு பாத்திரமாய் ஏந்தி, விருப்பற்று திருவினையும் கந்தையெனக் கருதும் வெறுங்கோவணத்து யதியரே பாக்யவான் ஆவார்'' என ஆதிசங்கரர் யதிபஞ்சகத்தில் புகன்ற வாசகத்திற்கொப்ப வாழ்ந்தார் யதி சாந்தானந்த பரமயோகி.

அதிஷ்டானத்திற்கு வரும் அன்பர்கள் இவருக்கு வடமேற்கு மூலையில் இருக்க ஓர் இடம் கட்டிக்கொடுத்தனர். பாலயோகி சாந்தானந்தரின் ''தபதேஜஸ்'' அவர் இருக்குமிடம்தேடி உணவு வந்தது. அன்பர்கள் பெருகுகிறார்கள். இதற்குள் ஒருவருடம் ஓடி மறைந்தது.

## அதிஷ்டானத்தில் ஆன்ம சோதனை

அதிஷ்டானத்திற்கு வரும் அன்பர்களிடம் தான் மேற்கொண்டிருக்கும் சங்கல்பத்தை விளக்கினார். குருவின் கட்டளைப்படி அதிஷ்டான இடத்தை உரிமை படைத்திருந்த நீதிபதி பத்மநாப சாஸ்திரி அவர்களின் குடும்பத்தார் சாசனம் எழுதி சாந்தானந்தரிடம் சமர்ப்பித்தார்கள்.

ஒரே அட்சர ரூபமாகவும் உயர்ந்த மந்திரசித்தி தரவல்லதாக விளங்கும் புவனேச்வரியின் 'ஹ்ரீம்' பீஜ மந்திரத்தைப்பற்றி ஆதிசங்கரர் ஸௌந்தர்யலஹரி 33வது பாடலில் சிறப்பித்துக்கூறி இதனை ஜெபிப்பவர்களுக்கு நினைப்பதுதானே நடக்கும் என்று உறுதி கூறுகிறார். அட்சர ரூபமாக இருக்கும் அன்னைக்கு வண்ணப்படம் ஒன்று வரையச் செய்து அதன் சன்னதியில் தன்னுடைய ஜபத்தையும் தவறாது சாந்தானந்தர் செய்து வரலானார்.

தன் குருநாதன் திருவடிகளை ஸ்மரணைசெய்து எந்தக் காரியத்தையும் தொடங்குவார். குருவே பரப்ரம்மம் என்ற உறுதி உடைய தூய குரு கைங்கர்ய சிகாமணி சாந்தானந்த ஸ்வாமிகளின் சங்கல்பம் நிறைவுபெற அன்பர்கள் ஆதரவு தானே வந்தது. அதிஷ்டானம் புதுமைப் பொலிவும் பெற்றது.

### அதிஷ்டான கைங்காயம்

அதிஷ்டானத்தின் தென்புறம் விநாயகரும், வடபுறம் முருகனும் வந்து அமர்ந்தார்கள். அதிஷ்டானத்தின் மூலஸ்-தானத்தில் சிவலிங்கமும், தத்தாத்ரேயர் திருவடிவங்களும் ஸ்வயம்ப்ரகாசர் காலத்தே அமைக்கப்பட்டிருந்தன.

தன் குருநாதன் அதிஷ்டானம் தன் தவப்புதல்வன் சாந்தானந்தரால் மேன்மையுறும் என்பதை அறிந்தார். மகிழ்ந்தார் ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச மாமுனி. 1948-ம் வருடம்

டிசம்பர் மாதம் 29-ந் தேதி ஸ்வயம்ப்ரகாச ஜோதி மகா சமாதியில் ஆழ்ந்தது பரமகுருவின் அதிஷ்டான கைங்கர்யத்தில் ஈடுபட்டிருந்த சாந்தானந்தர் தன் ஸத்குருவின் அதிஷ்டானத்தையும் சிறப்புறச் செய்ய அரும்பாடுபட்டார். புதுக்கோட்டையும், சேந்தமங்கலமும் அன்பர்களின் புனித ஸ்தலங்களாயின.

சேந்தமங்கலத்தில் தன் குருநாதன் தவமிருந்த குகையை செப்பனிட்டும், தத்தாத்ரேயர் திருக்கோயிலின் பக்கம் கல் மண்டபத்தை அமைத்து, பழுது பார்த்தும் மகத்தான ஸ்ரீசக்ர பீடம் நிறுவியும், குருநாதன் அதிஷ்டானத்தை அழகுற அமைத்ததும் ஸ்ரீ சாந்தானந்தரின் திருப்பணிகள் ஆகும். மேலும் விருத்திசெய்து சிறப்புமிக்கதாகச் செய்ய அவர் உள்ளம் விரும்பியபோது ஆலயத்தின் நிர்வாகம் குறுக்கிட்டது. நல்ல காரியம் செய்யப்போகிறவர்களுக்கு எத்தனை முட்டுக்கட்டை ஏற்படுமோ அத்தனையும் சாந்தானந்தருக்கு சேந்தமங்கலத்தில் ஏற்பட்டது.

## அதிஷ்டான கும்பாபிஷேகம்

ஸத்குருநாதன் அதிஷ்டான கைங்கர்யத்தில் தடை ஏற்படுகிறதே என்று வருந்தியபோது, ''சஞ்சலம் ஏன் படுகிறாய்? நீ இருக்கும் இடத்தில் நான் இருக்கிறேன். தடையற்ற இடத்தில் மடையற்ற வெள்ளம்போல் உன் சேவை பிரவகிக்கட்டும்'' என்று குருநாதன் கட்டளை உள்ளத்தே பிறந்தது.

அன்றுமுதல் புதுக்கோட்டை அதிஷ்டானத்தை விரிவு படுத்துவதிலே தீவிர கவனம் செலுத்தினார். கடல் கடந்து சென்றும் பெருவேள்விகள் இயற்றி நிதி சேர்த்து அதிஷ்டானத்தை மேன்மையுறச் செய்தார். 20—5—1956ல் மகாகும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெற்றது.

## அன்னை புவனை பீடாரோகணம்

தமிழகத்திலே எங்கும் இதுவரை அமைக்கப்படாத அன்னை ஸ்ரீ புவனேச்வரிக்கு ஆஸ்தானபீடம் அமைத்தார். அபார கலைத்திறன் படைத்த சிற்பிகளைக் கொண்டு தம் வழிபாட்டிற்காக உன்னதமாக சிலாவடிவமும் உருவாக்கிக் கொலு அமர்த்தினார். சின்னஞ்சிறு வயது முதல் தன் ஜெபப் பொருளாய் சித்தி ஒளியாய்த் திகழ்ந்த அன்னைக்குச் சிங்காதனம் அமைத்தார். ஏகாக்ஷர மந்திரத்திற்கு ஒரு வடிவமும், அதன் தாந்திர நுட்பமான மேருவும் செய்வித்தார்.

கட்டிடங்கள் வளர்ந்தன. ஜன நடமாட்டம் இல்லாத இடம் இப்போது ஜனவாசஸ்தலமாக மாறி ஸ்ரீ புவனேச்வரி நகர் என்று போற்றிப் புகழப்படலாயிற்று. அதிஷ்டான பூஜா கைங்கர்யங்கள் ஆன்ம திருப்தியோடு செய்விக்கப்படு கின்றன. தனி மனிதன் விருப்பத்திற்கு இங்கு அர்ச்சிக்கப் படுவதுமில்லை, அபிஷேகம் செய்யப்படுவதுமில்லை. உலக க்ஷேமம் கருதியே அபிஷேகமும், அர்ச்சனையும் நடைபெறு கின்றன.

## பெரிதினும் பெரிதுகேள்

சாந்தானந்தர் போதுமென்ற மனம் படைத்த மானுடம் அல்ல. உலக மக்களின் நலத்திற்காகப் பெரி தினும பெரிதுகேட்கும் பெருந் தபசி அவர், ''குறைவான உணவு ஏற்று குடிசையிலே தங்கும் எனக்குத் தேவையும் குறைவானதே. நிறைவான உன்னிடம் நீநில மக்களுக்கு நிறைவாகவே கேட்டுப் பெறும் நெஞ்சததை அல்லவா எனக்கு அளித்திருக்கிறாய் தாயே புவனேச்வரி. உன்னுடைய திருமுன்றில் உயர்ந்த வேள்வி இயற்ற ஒப்பற்ற வலிமை வழங்கு'' என்பது அவர் அன்னையிடம் செய்யும் பிரார்த்தனை யாகும். இந்த சிந்தனை எம்பெருமானிடம் சுந்தரர் நெல் கேட்டுப்பெற்ற வரலாற்றினை நமக்கு நினைவூட்டுகிறது அல்லவா?

## சத்ய தரிசனம்

சாந்தோக்கிய உபநிஷத்தில் சக்தியகாமன் தெய்வீக அறிவைப்பெற்று அவருடைய குருவான கௌதமரிடம் திரும்பி வந்தபோது கௌதமர் ''ப்ரஹ்மவிதிவ ஆபாதி தே முகம்'' உன்முகம் கடவுளை அறிந்தவன் முகம்போல ஒளி வீசுகிறது என்றார். சாந்தானந்தரை தரிசனம் செய்யும் போதெல்லாம் இந்த வாசகம் என் மனத்திரையில் ஓடவே செய்யும். அன்பர்களோ நடமாடும் புவனேச்வரி என்றே சத்குருநாதரை மகிழ்ந்து போற்றி வணங்குகின்றார்கள்.

ஊர்த்வ ரேதாஸ் தபஸ் யோக்ர:
நியதாசீ சசம்யமீ ।
சர்வானு க்ரஹயோ: சக்த:
சத்ய ஸந்தோப்வேத் ரிஷி: ॥

தூய்மையான ஆண்மையுள்ளவரும் உக்கிரமான தவஞ் செய்பவரும், சுருங்கிய உணவு கொள்பவரும் பொறிகளை அடக்கி ஆளும் ஆற்றல் உள்ளவரும் சாபம் கொடுக்கவும், அருள் செய்யவும் சக்தி நிறைந்தவரும் ரிஷி என்று கூறப் படுவார். எனவே தமிழகத்தின் தவமுனிவர் ஸ்ரீசாந்தா னந்தர் என்று கற்றவர்கள் போற்றி வணங்குகின்றார்கள்.

## இருபத்தைந்து வருட ஹோமங்கள்

புதுக்கோட்டை சத்குரு ஸதாசிவப்ரம்மேந்திரர் அதிஷ்டானத்தில் சென்ற இருபத்தைந்து வருடங்களாக மஹத்தான ஹோமங்கள் நடைபெற்று வருகின்றன. அன்னை புவனேச்வரியின் பீடத்திற்கு எதிரில் ஹோமம் நடை பெறும்போது சத்குரு சதாசிவ ப்ரம்மேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகளின் சிலா ரூபமும் சாட்சி பூதங்களாக அங்கு எழுந்தருளச் செய்விக்கப் படுகின்றன.

குபேரசம்பத்து படைத்தவர்களும் கண்டு அதிசயிக்கும் வண்ணம் அங்கு ஹோமங்கள் நடை பெறுகின்றன. திக்கு

திருச்சித்ர கூடத்தில் பள்ளிகொண்டிருக்கும் எம்பெருமானை மங்களாசாசனம் செய்யும் ஆழ்வார் தில்லையின் சிறப்பைக் கூறுகின்றார் திருவாய் மொழியில்.

' ''வாயோது வேதம் மல்கின்ற தொல்சீர் மறையாளர் நாளும் முறையால் வளர்த்த தீயோங்க வோங்கப் புகழோங்கும் தில்லைத் திருச்சித்ரகூடம் சென்று சேர்மின் களே''. அது மட்டுமா? அங்கு அந்தணர் வேதம் ஓது வதைக்கேட்ட கிளிகளும் அதையே திருப்பிச் சொல் கின்றனவாம்.

''செவ்வாய் கிளி நான்மறை பாடுதில்லைத்
திருச்சித்ர கூடம் சென்று சேர்மின்களே''

இதனைப்போலவே புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் வேத சாஸ்திரங்களில் மகரிஷிகள் உலக க்ஷேமத்தின் பொருட்டு தாம் அனுபவத்தில் கண்டுரைத்த மூல மந்திரங்களைத்தேடி எடுத்து பக்தி விநய பூர்வமாக யந்திரங்கள் அமைத்து பற்பல நாட்கள் விநயபூர்வமாக வேள்வியியற்றுவதும் அதனைக் காணும் அத்தனைச் சிறுவர்களும், பெரியவர்களும் அமரிக்கை யாக அமர்ந்து அந்த மூலமந்திரங்களை ஜபிப்பதும் கண் கொண்டு பார்க்கும்போது ஸ்ரீராமானுஜருக்குப் பிறகு புரட்சிப் பாதை வகுத்த ஸ்ரீசாந்தானந்த சற்குருவை போற்றாமல் இருக்க முடியாது. வறண்ட பிரதேசமாக இருந்த புதுக்கோட்டை தண்ணீர் பஞ்சமில்லாமல் இருப்பது அதிஷ்டானத்தில் நடைபெறும் அற்புதமான ஹோமங்களால் தான் என்று சொன்னால் அது மிகைப்பட்ட வாசகமல்ல. ஹோமத் தீ ஓங்க ஓங்க புதுக்கோட்டையின் புகழும் அதிஷ்டானத்தின் புகழும் ஓங்கி வருவதைச் சென்ற இருபத்தைந்து வருடங்களாக உடனிருந்து கவனித்தவர்கள் ஒப்புக்கொள்ளவே செய்வார்கள் என்பது உறுதி.

## உபநிடத முனிவர்கள்

உலக வரலாற்றில் ஞானிகள், மஹரிஷிகள் தங்கள் தாய் தந்தையர் வைத்த பெயரோடு சிறப்புப் பெறவில்லை. ''நசி

மூலம் கேட்காதே, ரிஷிமூலம் கேட்காதே'' என்பது ஒரு முதுமொழி. நதியானது புனிதமான மலை முகட்டிலிருந்து தோன்றலாம்; மலை அடிவாரத்திலிருந்து தோன்றலாம். ஏரியிலிருந்தோ, குளம் குட்டையிலிருந்தோ தோன்றலாம். அதனுல் பெறும் நன்மையைத்தான் சிந்திக்கவேண்டுமே தவிர, எந்த இடத்திலிருந்து உதயமாயிற்று என்ற சிந்தனை கூடாது. இதனைப்போலவே மஹான்கள், மஹரிஷிகள் எந்த வர்ணம். எந்த குலம் என்று சிந்திக்கக்கூடாது என்பது ஆன்றோர்களின் கட்டளை.

## திரை விலகியது

உபநிஷத மஹரிஷிகள் பெயர்கள் எல்லாம் தத்துவமான வையே தவிர, உண்மைப் பெயர்கள் அல்ல. பாரத நாட்டில் மஹான்கள் தம்மை மறைத்து, தம் செயல்கள் மூலமே இன்றும் நின்று நிலவி வருகின்ருர்கள். இந்த அன்றையப் போக்கை மாற்றி காலத்திற்கேற்ப மடை திருப்பித்தான் ஆகவேண்டும் இன்றைய மக்கள் பிறக்கும்போதே அறிவாளி களாகவும் ஏன்? எது? எப்படி? என்று வினு எழுப்புகின்ற வர்களாகவும் வளர்ந்து வருகின்ருர்கள். சமுதாயச் சூழ்நிலைக்கேற்ப உள்ளதை உள்ளபடி உரைக்கவேண்டும் என்ற தர்மம் நமக்கு ஏற்படுகிறது என்ருலும் சில மகான்கள் வாழ்க்கையின் இறுதிக் காலத்தில் முன் வாழ்க்கையின் உறவினர் என்றுகூறி பலர் வந்து அமர்ந்து ஞானிகளின் இலட்சியத்திற்கு இடையூறு விளைவித்திடுதல் கண்டு அஞ்சியே சாந்தானந்தர் தன்னை இன்னுர் என்று எவரிடமும் இனம்பிரித்துக் கூறவில்லை. நாமும் பல வருடத் தொடர்பால் நேர்முகமாகவும், மறைமுகமாகவும் அன்பர்களை விசாரித்தும் கல்லிலிருந்து நார் உறிப்பதுபோல செய்திகள் சேகரித்து இந்த வரலாற்றை எழுதுகின்ருேம். சாந்தானந்த ஸத்குரு நாதர் அடியவன் செய்யும் அபராத செய்கையை மன்னித்து விடவேண்டுமென அவரது திருவடிக் கமலங்களில் வணங்கிப் பிரார்த்திக்கின்ருேம்.

நற்றவயோகிகள், நன்மனச் சிந்தனை அனைத்தும் தடையின்றி நிறைவேறும். புதுக்கோட்டை அதிஷ்டானம் பூர்ணத்துவ நிலை அடைந்துவருகிறது. பரமகுருவின் அதிஷ்டானத்தின் பெருமை பாரத நாடெங்கிலும் பரவி வருகிறது. தன் குருநாதர் அதிஷ்டானத்தை மகோன்னதமாகச் செய்யமுடியவில்லையே என்ற ஏக்கம் சாந்தானந்த சற்குருவின் உள்ளத்தின் ஆழத்தில் பதிந்துவிட்டது.

## ஸ்ரீஸ்கந்தகிரி உதயம்

இந்த சிந்தனை அவரது கனவுத் தோற்றம்போல நெஞ்சத் திரையிலே அடிக்கடி காட்சி தருகிறது. சுற்றிலும் மலைகள் சூழ்ந்த பகுதி. இடையிலே ஒரு சிறு ஓடை, அதிக உயரம் இல்லாத குன்று. அங்கிருந்து பார்த்தால் எதிரே கிராமங்கள். அந்த இடத்திலே எனக்கொரு இடம் என்கிறான் ஞான ஸ்கந்தன். இத்தகைய சிந்தனையை அன்பர்களிடம் விவரித்து இதற்குரிய இடம் எங்கே இருக்கிறது என்று விசாரிக்கின்றார்.

இந்த சமயத்தில் தண்டாயுதபாணி விக்ரஹம் ஒன்றை ஒருவர் கொண்டுவந்து கொடுத்து பணிந்து நிற்கின்றார். நான் மறந்துவிடுவேனென்று நினைவுபடுத்த குருநாதா நீ வந்துவிட்டாயா என்ற மகிழ்வுடன் விக்ரஹத்தை ஏற்றுக் கொள்கிறார் சாந்தானந்தர். இந்த சம்பவம் 1966-ஆம் ஆண்டின் இறுதியில் நடைபெற்றது.

1967-ஆம் வருடம் செப்டம்பர் மாதம் 10-ஆம் தேதி சுவாமிகள் இந்த இடத்தைப்பற்றி அன்பர் ஒருவரிடம் விவரித்துக் கொண்டிருந்தார். அருகே கேட்டுக்கொண்டிருந்த அன்பர், சுவாமி தங்கள் நினைவு கனவல்ல. தாங்கள் விவரித்ததுபோல் உள்ள இடம் தங்களுக்காகவே இருப்பது போல புறப்பட்டு வாருங்கள் காட்டுகிறேன் என்று வழிகாட்டினார்.

அன்பரின் ஆறுதலான சொல்கேட்டு ஸ்வாமியும் அன்பர்களும் புறப்பட்டார்கள். சேலம் மாவட்டம் உடையாபபட்டிக்கு அருகே உள்ள மலைச்சாரல் ஸ்வாமி சாந்தானந்தாவின் சிந்தனையில் காட்சியளித்த இடம். அங்கு சென்று தீபமேற்றியதும் ஸ்வாமிக்கு தியானநிலை கூடி அக்காட்சி தோன்ற ஆரம்பித்தது.

இடம் கண்டாயிற்று: அரசுக்குச் சொந்தமான இடம். அதுவும் ஒரு பிராமண சந்நியாசிக்கு ஆதரவாக உத்தரவு வழங்கவேண்டுமே என்ற கவலை அன்பர்களுக்கு ஏற்பட்டது. எதைச் செய்தாலும் தான் செய்ததாக ஸ்வாமி சாந்தானந்தர் கூறுவது கிடையாது. சற்குருநாதன் கிருபையே இந்த சடலத்தை கருவியாகக்கொண்டு செயல் படுகிறது என்றே கூறுவார்.

முறைப்படி அரசுக்கு விண்ணப்பம் செய்யப்பட்டது. இதைப் படிப்பவர்கள் ஆச்சர்யப்படாதீர்கள். தெய்வ சங்கல்பம் என்பது இதுதான். ஒருவார காலத்திற்குள் அந்த இடத்தை ஸ்வாமிகளுக்கு வழங்க அரசு உத்தரவிட்டு முறைப்படி சாசனமும கைபெழுத்திட்டு வழங்கப்பட்டது என்றால் அது தெய்வத் திருவுள்ளம் என்று நாம் சொல்லலாமா?

அருகே இருந்த குன்றில் அந்த வருடம் கார்த்திகை மாதம் ஸ்ரீஸ்கந்த ஜோதியை ஏற்றுவித்தார்கள். திருவண்ணாமலையில் அண்ணாமலை தீப ஜோதிக்கு மக்கள் வந்து தரிசித்து மகிழ்வதுபோல ஸ்கந்த ஜோதியைக்காண மக்கள் கூட்டம் திரண்டு கண்டு மகிழ்ந்தது.

1968ம் வருடம் மே மாதம் ஸ்கந்தாச்ரமத்தில் கட்டிடங்கள் கட்ட திட்டமிடப்பட்டது.

உடையாப்பட்டி குன்று ஸ்கந்தாச்ரமமாயிற்று. ஞான ஸ்கந்த மூர்த்திக்கு அற்புதமான ஆச்ரமம். எதிர்புறத்தில்

காண்பவர் யாவரும் வியக்கும் வண்ணம் நல்ல உயரத்தில் ஸ்ரீஅஷ்டாதசபுஜ மஹாலக்ஷ்மி துர்கா பரமேச்வரி திருவுருவம் மெய்மறக்கச் செய்யும் பாங்கில் அமைந்திருக்கிறது. நல்ல விசாலமான மண்டபம், வேதபாடசாலை, ஆச்ரமவாசிகள் தங்கக் கூடங்கள், அன்பர்கள் தங்க விடுதிகள் அத்தனையும் அமைக்கப்பெற்று 8—2—1971ல் மஹா கும்பாபிஷேகம் பல்லாயிரக்கணக்கான மக்கள் காண நடைபெற்றது.

ஸ்ரீசாந்தானந்தரைக் குறிப்பிடும்போது பெரிதினும் பெரிது கேட்கும் பேராண்மையாளர் என்று குறிப்பிட்டோம். ஸ்ரீஸ்கந்தாச்ரமத்தில் அமைந்திருக்கும் 16 அடி உயரமுள்ள ஸ்ரீபஞ்சமுக ஆஞ்சநேயர், ஸ்ரீபஞ்சமுக விநாயகப்பெருமான் சிலைகளைக் கண்டவர்கள் சாந்தானந்தரின் உள்ளத்தின் நுட்பத்தையும், அதன் உயர்வையும், அதில் உன்னதமாக மலர்ந்துவரும் ஆன்ம சிந்தனையையும் அறிந்து வணங்கி நின்றே திருவார்கள்.

பாரத நாட்டில் ஆன்மீகத் தத்துவங்கள் மலர உழைத்த அத்தனை மகான்களுக்கும் ஸ்கந்தகிரியில் உருவச்சிலை அமைத்து இதிகாச புராண வரலாற்றினை கற்சிலைகளாக என்றென்றும் காட்சித்தர ஏற்பாடுசெய்து வருகின்றார். இன்னும் சில வருடங்களில் ஸ்கந்தாச்சிரமம் அகில இந்தியப் புகழ்பெறும் அமைப்பாக மலரப்போவதும் உறுதி. இங்கு பல மகான்கள் காஞ்சி, சிருங்கேரி மற்றும் தமிழக ஆதீன கர்த்தர்கள் ஸத்கைங்கர்ய பக்தர்கள் வருகைதந்து ஆச்ரம வளர்ச்சியைக்கண்டு நல்லாசி வழங்கி வருகின்றார்கள். நடமாடும் புவனேச்வரியாக ஞானஸ்கந்த மூர்த்தமாக விளங்கும் சாந்தானந்த சற்குரு மகராஜ் வாழ்க்கை வரலாற்றைப் படித்து நிறைவுபெற இருக்கும் உள்ளங்களுக்கு ஒரு ஆறுதல் ஏற்பட வேண்டும் அல்லவா?

## நுட்பமும் திட்பமும்

''வருமுன் உரைத்தல்'' என்ற வாசகத்திற்கொப்ப மகரிஷி மாயாண்டி யோகியின் தீர்க்க திருஷ்டி ஸ்ரீசாந்தானந்தரின் அவதார மகிமையை முன்கூட்டியே பெற்றோருக்கு அறிவித்தது ஆச்சர்யமல்லவா?

ஆதிசங்கரரைப்போல சின்னஞ்சிறு வயதிலே பெற்றோரை மறந்து உலக க்ஷேமத்தை நாடிய உள்ளம் அவதாரமாக ஆனதில் என்ன வியப்பு?

மீனாக்ஷி அம்மை திருமணத்தின்போது சோமசுந்தரப் பெருமானோடு குபேரனும் கூடவே வந்தான் என்ற குறிப்பு நம்மை அறியாமலேயே வந்துசேர்ந்தது அதிஷ்டானத்திலே நடைபெறும் ஹோமம் சிறப்புற சிவபெருமான் தோழன் குபேரன் நல்லடியார் சங்கல்பிக்கும் செயல்களை தக்க நிதி கொடுத்து உதவுகிறான் என்பதை கண்கூடாகக் கண்டு ஆச்சர்யம் அடைகிறோமல்லவா?

ஸ்ரீ சுப்ரமண்யப் பெருமான், திருஞானசம்பந்தராக அவதரித்தார் என்பதும் நாம் அறிந்ததுதானே? தந்தையைச் செந்தூரிலும், வயலூரிலும் பூசனை புரிந்து வருவதும் நாம் அறிந்ததுதானே? ஜகத் ஜனனியாகிய ஸ்ரீ புவனேச்வரிக்குப் பீடம் அமைத்து வழிபட சுப்ரமண்யம் மீண்டும் தோன்றினார் என்றால் அதுவும ஆச்சர்யமல்லவே!

சற்குருநாதன் தாளில் ஸ்மரணை உடையவர் இந்த உலகில் சாதிக்க முடியாத காரியம் எதுவும் இல்லை என்பதை நமக்குப் பாடம் புகட்டவே சாந்தானந்த அவதாரம் உற்பவித்தது என்று சொன்னால் அது மிகையாகுமா?

வேள்வி சிறந்த பாரதத்தில், வேள்வி எப்பொழுதோ ஒரு நாள் நடைபெறுவது கேள்விப்பட்டிருக்கிறோம். நவசாலபுரி என்னும் புதுகோட்டை அதிஷ்டானத்தில் தொடர்ந்து

வெள்ளம் நடக்கும். வேறு எங்கேனும் உண்டா என்று சிந்தித்தால் நம் மனது பேரானந்தத்தில் பெருமிதம் அடையாதா?

புதுக்கோட்டை நகரில் அதிஷ்டானத்தில் ஹோமம் நடத்த ஆரம்பித்த பிறகு தண்ணீர் பஞ்சம் ஏற்பட்டது உண்டா? ஹோமத்தின்போது பூர்ணாஹுதி நடைபெற்றதும் மேகங்கள் கொட்டி மகிழும் செயலைக் கண்டு இன்புறுதார் யார்?

புதுக்கோட்டை அதிஷ்டானம் திருக்கோயில் அல்ல. புவனேச்வரியின் ஸ்ரீசக்ரபீடம், ஆலயங்களுக்கு வேண்டிய அமைப்புக்களோ, ஆரவாரங்களோ இல்லை. ஆன்மநேய ஒருமைப்பாடு, ஆன்மீக தரிசனம் பெறவிரும்புவோர் ஞானி களின் அதிஷ்டானத்தில் அன்னையின் அருள் பீடத்தின் முன்னால் அமர்ந்து ஆனந்தப் பெருவாழ்வைப்பெற அவதூதர் மூவர் அருளால் அமைந்த ஆனந்த ரத்னபீடமே அன்னை புவனேச்வரியின் திருமாளிகை என்பதை ஞான பரம்பரையில் தோன்றிய நல்லறிஞர்கள் அறியும் காலம் வரும்.

சத்குரு சாந்தானந்தர் தனக்குப் பின்னால் இந்த அதிஷ்டானம் எப்படி இயங்கவேண்டும் என்று கவலைப்பட வில்லை. அந்த பொறுப்பை ஸ்ரீஜகத்குருவின் திருவடிகளில் சமர்ப்பித்துவிட்டார்.

சத்குரு சாந்தானந்தருக்குப் பாதகாணிக்கையாகக் கிடைத்த நிதியை இரு தர்மடிரஸ்டுகள் ஏற்படுத்தி சுத்தமான கணக்கும், தொய்வில்லா முறைகளும் வகுத் திருக்கிறார். புதுக்கோட்டை அதிஷ்டானம், ஸ்கந்தாச்ரமம்

இரண்டிற்கும் ஸ்ரீமத் சாந்தானந்தரே பொது நிதி. அது பொன்முட்டையிடும் வாத்து என்று மட்டும் நான் குறித்தால் போதும். அறிஞர்கள் அறிவர் அதன் நுட்பத்தை.

அழகாபுரி அமரஜோதி புவனஜோதியாக ஸ்கந்தாச்ரமத்தின் ஸ்கந்த ஜோதியாக காட்சி தருகிறது. அதனைப் போற்றுவம்; வாழ்த்துவம்; வணங்குவம்.

ஓம் தத் ஸத்

———

# தத்தகிரி ஸ்கந்தன் ஸ்தலம்

## சேந்தமங்கலம்

அருள் ஞானச் செல்வர்கள் உலாவந்த இடங்கள் அற்புதச் க்ஷேத்திரங்களாகும். காடு மேடாயினும் கரடு குன்றாயினும் அவர்கள் தங்கியிருந்த இடங்கள் அனைத்தும் புண்ணிய பூமியாகும்

உள்ளத்தில் இறைவனைநாட்டி, உயர் யோக நிலையில், தன்னை மறந்து தனிமோனத் தவத்தில் யோகிகள் ஆழ்ந்த இடங்கள் அனைத்தும் ஞான பூமியாக நல்லோர்களால் போற்றப்படும் சிறப்புடையது.

இதோ ஓரிடம். அருட்ஜோதிக் குயில் அகவி அருள் பொழிந்த ஆனந்த க்ஷேத்திரம். அவதூத சாம்ராஜ் யத்தின் சாம்ராட்டாக விளங்கிய ஸ்ரீஸ்வயம் ப்ரகாச ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் ஆண்டவன் அருளைப்பெற தவங்கிடந்து தன்னருள்பெற்று, தரிசித்த புனித க்ஷேத்திரம்.

தன்னையே மறந்து சகலத்தையும் துறந்து. அத்தனையே சித்ததில்வைத்து, ஆழ்ந்த மோனத் தவத்தில் பற்பல வருடங்கள் அருந்தவம் புரிந்த அற்புத பூமி.

சித்தத்தில் சிவனைத் தேக்கிச் சிந்தனையை ஒருமுகப் படுத்தி, எத்திசையும், எதனையும் நோக்காது, பசி, பட்டினியும் பார்க்காது பரத்துடன் லயித்து இத்தரையையே மறந்து, இறைவன் இன்னருளுக்கு ஏற்பத் தவம்புரிந்து, இறையருள்பெற்ற ஒப்பற்ற உயர்நிலம்.

இந்நாள் இத்தரையில் எல்லவரும் போற்றும் வல்லவராய், நல்லவராய், மாமுனியாய், மனம் அடங்கிய சித்த புருடராய், யோக நாயகராய் அவதூதராய் விளங்கிய ஸ்ரீ சுயம்ப்ரகாச சோதி சுடர்காட்டி, ஒளிகூட்டி, துலங்கிய க்ஷேத்திரமே சேந்தமங்கலம்.

குருக்ஷேத்ரம்

சேலம் மாவட்டம், நாமக்கல் வட்டம், சேந்தமங்கலம் சன்யாசி கரடு என்று சான்றோர்கள் போற்றும் திவ்ய திருப்பதி, திருவருள் பாலிக்கும் குருக்ஷேத்ரமாக விளங்குகின்றது

எத்தனை எத்தனை சீடர்கள்? எத்தனை எத்தனை அறிஞர்கள்? எத்தனை எத்தனை நல்லோர்கள்கூடி, சுயம்ப்ரகாச ஜோதியில் தங்கள் அகவிளக்கை ஏற்றிக்கொண்டார்கள் இங்கு உள்ளொளி பெற்ற அதிசயம் நிகழ்ந்தது; நிகழ்ந்து கொண்டு இருக்கிறது; நிகழ்ந்து கொண்டேயிருக்கும்.

நல்லவர் ஒருவர் பிறந்ததால் அவர் பிறந்த கிராமம் புகழும் பெருமையும் பெறுகிறது நாட்டு மக்களின் நினைவில் நிற்கிறது. நல்லவர்கள் வாழ்ந்த இடமும், இறையருள் பெற்ற இடமும், இயற்கையோடு கலந்த இடமும் திவ்ய க்ஷேத்ரங்களாகத் திகழ்வது அதிசயமல்லவே? சேந்தமங்கலம் தமிழக வரலாற்றில் இடம்பெற்று விட்டது. ஆன்மீக சிந்தனையாளர் அகத்தில் நிலைத்துவிட்டது.

சேந்தமங்கலம் சந்யாசி குன்றில் உள்ள குகையில் அவதூதர் ஸ்வயப்ப்ரகாச மாமுனிவர் தவம் இருந்து நல்லருள் பெற்றார். இதே இடத்தில் ஜீவன் முக்தராக இன்றும் திகழ்ந்து அருள்பாலித்து வருகிறார். உருவுடன் குருவாழ்ந்து குன்றாத ஞானச் செல்வத்தை அருளாக வழங்கிய இடத்தை குருக்ஷேத்திரம் என்று கூறலாம் அல்லவா?

ஸ்ரீ தத்தாத்திரேயர்

ஞானிகளுக்கும், யோகிகளுக்கும் ஞான குருவாய், ஆதி குருவாய் அமைந்தவர் ஸ்ரீ தத்தாத்திரேயர். தமிழகத்தில் தத்தாத்திரேயருக்கு திருக்கோயில் அமைந்த இடம் சேந்தமங்கலம் சந்நியாசி கரடு. சந்நியாசிக்கரடு என்று பெயர்பெற்ற அந்த குன்றம் இப்பொழுது தத்தகிரி ஆகியது. ஸ்ரீ ஸ்வயம்ப்ரகாச மாமுனிவர் எழுப்பிய திருக் கோயில் ஸ்ரீ தத்தாத்ரேயர் சந்நிதியாக விளங்குகின்றது.

தமிழகம் அறியாத அந்த தத்தாத்திரேயர் யார்? அவரது வரலாறு என்ன? ஸ்வயம்ப்ரகாசர் தத்தாத்திரே யருக்கு திருக்கோயில் ஏன் அமைத்தார்? சிந்தித்துத் தெரிந்து கொள்ளவேண்டிய வரலாறு இது. சிந்தனை எப்பொழுதும் நல்லதையே வழங்கும்.

சப்த ரிஷிகளில் ஒருவரும் மகா ஞானியுமான அத்திரி மகரிஷி. அனஸூயா தேவியை மணந்து இல்லற ஞானி யாகத் திகழ்ந்தார். அனஸூயை, (அசூயையில்லாதவள்) பதிவிரதா தர்மம் தவறாது, கணவனை நேசித்து, பக்தி செய்து, கைங்கர்யம் செய்துகொண்டு வருமபோது மும் மூர்த்திகளுக்கொப்பான ஒரு புத்திரன் தனக்குப் பிறக்க வேண்டுமென மானசிகமான தவம் செய்து வந்தாள்.

அத்திரி மகரிஷியும், ஒப்புயர்வற்ற ஒரு சற்புத்திரன் தனக்குக் கிட்டவேண்டுமென்று தவமியற்றினார். அனுக்கிரக காலம் வந்தது. அந்த சமயத்தில் நாரத மகரிஷி இரும்பு லான கடலை சிலதை கையிலெடுத்துக் கொண்டு, மும்மூர்த்திகளின் தேவிமாரிடம் சென்று இரும்புக் கடலையை வறுத்துத் தருமாறு வேண்டினார். மூவரும் முயன்றனர். முடியவில்லை என்றனர்.

அனஸூயையை நாடினார் நாரதர். இது தெய்வ சோதனை என்பதை அறிந்து, தன்னுடைய கணவனின் பாதாரவிந்தங்களை ஸ்மரித்து, இந்த இரும்புக் கடலைகள் வறுபட்டு பொரியட்டும் என்றுகூறி வறுத்தாள். கடலைகள் பொரிந்தன. நாரதருக்கு மட்டிலாத மகிழ்ச்சி ஏற்பட்டது.

இந்த வறுபட்ட கடலையை எடுத்துக்கொண்டுபோய் மூன்று சக்திகளிடமும் காட்டி, அனஸூயையின் கற்பின் வலிமையை, பதிவிரதா தன்மையைப் புகழ்ந்தார் நாரதர். கலகம் ஆரம்பமாகிவிட்டது.

தேவிமார் மூவரும் தம் தம் கணவரைத் தூண்டி, அனஸூயையின் கற்பை சோதிக்குமாறு வேண்டினர். மூர்த்திகள் மூவரும் அத்திரி மகரிஷியின் தவமும், அனஸூயையின் பிரார்த்தனைக்கும் அனுக்கிரகம் செய்யவேண்டிய காலம் வந்துவிட்டதை அறிந்தார்கள்.

மூர்த்திகள் மூவரும் மாறு உருக் கொண்டார்கள். அத்திரி மகரிஷியின் ஆச்ரமம் சென்று பிக்ஷை கேட்டனர். ஆடையின்றி வந்து பிக்ஷையிடவேண்டுமென்று தெரிவித்தார்கள்.

இவர்கள் விருப்பத்தைத் தெரிந்த அனஸூயை மனம் நொந்தாள். தன் பதியை நினைத்துக்.தொழுதாள். அவளின் உட்குரல் உள்ளே இருந்து ஒலித்தது. "அஞ்சாதே, உன் பதிவிரதா தன்மைக்கு இதனால் பங்கமேற்படாது. பாக்யவதி ஆவாய் அதிதி பூசனைக்குப் புறப்படு" என்றது.

தெய்வ சோதனைக்குத் தயாராகி பிக்ஷா பாத்திரத்துடன். ஆடையின்றி வந்த அனஸூயா பார்வை பட்டதும் அதிதிகள் மூவரும் மூன்று குழந்தைகளாயினர். ஸ்தன்யத்திலே பால் சுரக்கவும் செய்தது. மூன்று குழந்தைகளையும் வாரி எடுத்தாள் அனஸூயை. மூன்று தலையுடன் உடல் ஒன்றாய் இருகால்களும், ஆறு கரங்களுடைய குழந்தையாக அது உருப்பெற்றது.

அத்திரி மகரிஷி இதை அறிந்து மகிழ்ந்தார். தன் தவம் பலித்ததை நினைந்து மகிழ்ந்தார். ஒரே தத்வம் மூன்று நிலைகளாகப் பிரிந்து ஒன்றாக உருப்பெற்று வந்திருப்பதாக அனஸூயையிடம் தெரிவித்து மகிழ்ந்தார்.

நாரதர்மூலம் தங்கள் கணவன்மார் அனஸூயையின் குழந்தையாக வடிவெடுத்த செய்தியை அறிந்து அனஸூயையிடம் வந்து பதி பிக்ஷை கேட்டனர். குழந்தையின் வடிவத்திலிருந்த மூன்று மூர்த்திகளும் வெளிப்பட்டுவந்து குழந்தையை ஆசீர்வதித்து, தத்தாத்ரேயர் என்ற பெயர் சூட்டி வளர்க்குமாறு அருளாசி வழங்கியபின் தம் தம் சக்திகளுடன் சென்றனர்.

தத்தாத்ரேயர் எல்லா ஞானமும் ஒருங்கே பெற்று, அவதூத பரம்பரையின் மூலவராய், ஸர்வம் பிரம்ம மயம் என்ற ஞானத்தால் லோக சஞ்சாரம் செய்யப் புறப்பட்டார்.

ஸ்ரீ தத்தாத்ரேயர் திட ஞானம் ஏற்பட ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமிக்கு அவதூத கீதையை உபதேசம் செய்தார். அவதூத கீதை பல அருமையான ஞான அனுபவ உண்மைகளையும், வேதாந்தக் கருத்துக்களையும் கொண்ட சிறந்த சாஸ்திரமாகும்.

பழனிமலைமேல் தண்டாயுதபாணியாக முருகன் காட்சி தரும் வரலாறும், தத்தாத்ரேயர் முருகனுக்கு அவதூத கீதை உபதேசித்த வரலாறும் இணைத்துப் பார்த்தால் தண்டாயுத பாணிக்கும்—தத்தாத்ரேயருக்கும் உள்ள தொடர்பும், தோற்றமும் எளிதில் அறியத் தக்கதாக இருப்பதை அறியலாம்.

இமயமலையில் தத்தாத்ரேயர் குகையில் இன்றும் இருந்து வருவதாக நம்பப்படுகிறது. தத்தாத்ரேய பகவான் தபோ பூமியான கிரினாரில் ஸ்ரீதத்தகுரு சரணபாதுகை இருக்கிறது. அவதூத ஆச்ரமம் ஏற்பவர்கள் இந்த ஸ்ரீதத்தகுரு சரண பாதுகையை தரிசித்தே தீரவேண்டும்.

யோகிகளும் அவதூதர்களும் பல சிரமங்களையேற்று குரு சரண பாதுகையை தரிசித்து சர்வ சித்தியைப்பெற்று வருகிறார்கள்.

ஸ்ரீஸ்வயம்ப்ரகாச மாமுனிவர் வடக்கே பத்ரி நாராயணத்தில் ஸ்ரீதத்த குகையில் தியானத்தில் இருக்கும் போது தியானச் சுடரில் தத்தாத்ரேயர் எழுந்தருளி, தென் பாரதத்தில் தனக்கு ஒரு திருக்கோயில் அமைக்கும்படி உத்தரவிட்டதாக உணர்ந்தார்.

சேந்தமங்கலம், சந்நியாசிக் குன்றுக்கு மீண்டும் ஸ்ரீஸ்வயம்ப்ரகாசர் வந்து சேர்ந்ததும் ஆதிகுரு பகவானுக்கு ஆலயம் கட்டும் திருப்பணியில் தீவிரமாக செயல்பட்டார்.

ஸ்ரீஸ்வயம்ப்ரகாசரது அறுபதாம் ஆண்டு நிறைவு நடை பெறும் வருடத்தில் 29—5—1931 ஆம் வருடம் தத்தகிரி தத்தாத்திரேயர் திருக்குடமுழுக்கு செய்விக்கப்பெற்றது.

தத்தாத்திரேயர் பாதகமலங்களுக்கு அடியில் ஸ்ரீஸ்வயம்பிரகாச அவதூத ஸ்வாமிகளின் அதிஷ்டானம் அமைந்திருக்கிறது. சந்நியாசி கரடு இப்பொழுது தத்தகிரி என்று வழங்கப்பட்டு பிரபலமாகிவிட்டது.

இங்கிருக்கும் ஸ்ரீதத்தாத்திரேயர் திரு உருவப்படிவம் அழகுக்கு அழகு செய்வதாக காம்பீர்யமாக உருப் பெற்றிருக்கிறது. ஸ்ரீதத்தாத்திரேயர் சந்நிதியில் ஆன்ம சகிருதுகளுக்கு ஸ்ரீஸ்வயம்ப்ரகாசர் உபதேசம் செய்தபோது உடனிருந்து கண்டுகளித்தபேறு அடியேனுக்கு இருக்கிறது அது நெஞ்சம்விட்டு நீங்காத நினைவாக இன்றும் இருந்து வருகின்றது.

## ஸ்ரீசாந்தானந்தர்

ஸ்ரீஸ்வயம்ப்ரகாச ஜோதியில் ஒளியேற்றப்பட்ட திரு வுருவே ஸ்ரீசாந்தானந்த ஸ்வாமிகள். ஸ்வயம்ப்ரகாச ஸ்வாமிகளின் பூர்ணாசி பெற்ற அருந்தவச்செல்வர்

ஸ்ரீ சாந்தானந்தர் புதுக்கோட்டைக்குச் சென்று பரம குருவின் அதிஷ்டானத்தையும் மாதா ஸ்ரீ புவனேஸ்வரி பீடத்தையும் சிறப்பிக்க கலியுகத்தில் மகத்தான ஹோமங்கள் நடத்தியும், பாரத நாடும், கடல்கடந்த பிரதேசங்களில் வாழும் ஆன்ம சுக்ருதுகளும் புதுக்கோட்டை அதிஷ்டானத்தைப்பற்றி தெளிவாக அறியும்படி பல்வகையாலும் உயர்த்திவிட்டார். இருந்தாலும் அவர் மனம் நிறைவை அடையவில்லை.

தன் குருநாதன் அதிஷ்டானம் உன்னதமடையச்செய்ய வேண்டுமென்ற தவிப்பு அவர் மனத்தில் இடைவிடாது இருந்துகொண்டே வந்தது. திக்கெட்டும் தன் குருநாதன் புகழ் பரவவேண்டும் என அவர் பொன்னுள்ளம் விரும்பியது. குருநாதா குருநாதா என்று குரு ஸ்மரணையில் இருந்து கொண்டே செயல்படத் தொடங்கினர்.

சேந்தமங்கலத்திற்கு அடிக்கடிவந்து பல சீர்திருத்தங்களை மேற்கொண்டு செய்தார். பூரணமாக செய்து முடிக்கப் பல தடைகள் ஏற்பட்டன. ஒத்துழைப்பு இல்லை. குரு கைங்கர்யம் செய்யும்போது தடையேற்படுகிறதே என்று சற்று வருந்தினர். தடைகளும், இடையூறுகளும் ஏன் ஏற்பட்டன என்று அவரும் அறிய முடியவில்லை. இறைவன் சித்தமும், குரு கடாக்ஷமும் அவரை திசை திருப்பவே தடையாக வந்தன என்று இன்று தெளிவாக எழுத முடிகிறது. அன்று? காலம் என்பது இறந்த மருத்துவன். தடைகள் ஏன் வந்தன? அது ஒரு அதிசய வரலாறு.

ஸ்கந்தகிரி

அவதூத சுயம்ப்ரகாசர் தியானக் கடரில் தத்தகுரு எழுந்து தனக்கு ஒரு திருக்கோயில் எழுப்புமாறு கட்டளை இட்டதுபோல, ஸ்ரீ சாந்தானந்தரின் தியானச் சுடரில் ஸ்ரீ ஸ்கந்தகுரு தோன்றி தனக்கு ஒரு திருக்கோயில் எழுப்புமாறு கட்டளையிட்டு இடத்தையும் காட்டியேக, அந்த இடம்

எங்கே இருக்கிறது என்று சாந்தானந்தர் தேடி, சேலம் உடையாப்பட்டிக்கு அருகிலுள்ள மலைச்சாரலே இறைவன் குறிப்பு காட்டிய திருத்தலம் என்று உணர்ந்து தெரிந்து செயல்பட துணிந்து சங்கல்பம் ஏற்றார்.

துறவிகளின் சங்கல்பம் சேராததை எல்லாம் சேர்த்து வைக்கும். கூடாததையெல்லாம் கூட்டிவைக்கும். அரசின் ஆசரவோடு இடம் கிடைத்தது. அதிகாரிகள் ஒத்துழைத் தார்கள். வள்ளல்கள் வாரி வழங்கினார்கள். இன்று ஸ்கந்தாச்ரமம் காம்பீர்யமாகத் தலைநிமிர்ந்து நிற்கிறது. சித்தர்களையும், பக்தர்களையும் சேர்த்து கவர்வதாக, பக்திக்கு வித்தூன்றும் பைங்காலாக சத்தானவர் தேடிவரும் உப சாந்த பூமியாகத் திகழ்கின்றது ஸ்கந்தகிரி.

மூன்று வருடங்களுக்குள் மயன் சிருஷ்டியைப்போல ஸ்கந்தாச்ரமத்தை சாந்தானந்தர் சிருஷ்டித்துவிட்டார். ஸ்ரீ ஸ்கந்தகுருவும், ஸ்ரீ அஷ்டாதசபுஜ மஹாலக்ஷ்மி, துர்கா பரமேச்வரியும் ஸ்கந்தாச்ரமத்தில் திருக்கோயில் கொண்டு விட்டார்கள்.

அதுமட்டுமா? கண்டவர் வியக்கும் வடிவில் பஞ்சமுக விநாயகரது வடிவமும், பஞ்சமுக ஹனுமானின் திருவுருவங் களும் அங்கு எழுந்தருளச் செய்துவிட்டார். அண்ணாமலையில் கார்த்திகை தீபம் ஏற்றுவதுபோல ஸ்ரீ ஸ்கந்தஜோதி, ஸ்கந்தாச்ரமத்தில் குன்றின் உச்சியில் ஏற்றப்பட்டு பக்தர் பரவசத்தில் மூழ்கி மகிழ்கின்றார்கள்.

முனிவர்களில் நமக்கு மிகவும் பிடித்தமான முனிவர் விசுவாமித்திரர்தான். க்ஷத்ரியனாகப் பிறந்து, மன்னனாக வாழ்ந்து அரச போகத்தைத் துறந்து, கடுந்தவம் புரிந்து, அனைத்து சக்திகளையும் தன் தபோ வலிமையால் பெற்று, அந்தணர்கள் ஜபிக்கும் காயத்ரீ மந்திரத்தின் பிரயோக கர்த்தாவாகி, திரிசங்குக்காக ஒரு சொர்க்கத்தைத் தன் தவ வலிமையால் சிருஷ்டித்த மகனீயர் விசுவாமித்திரர். அவர் மீது நமக்கு ஒரு பக்தியும், விசுவாசமும் தோன்றுவது ஆச்சர்யமல்லவே?

விஸ்வாமித்திருக்கு அத்தகைய ஆற்றல் இருந்ததா என்ற சந்தேகம் யாருக்காவது வருமானால் சற்று திரும்பிப் பாருங்கள். கோபமே வடிவான விசுவாமித்திரர் தன் கோபத்தைத் துறந்து சாந்தராகி, சாந்தானந்தர் வடிவிலே ஸ்கந்தகிரியில் உலா வருவதை கண்டு தரிசிக்கலாம்.

சொர்க்கம் என்று ஒன்று இருப்பது உண்மையானால் இங்கு நம்மை வாழ்விக்கவந்த மகனீயர்கள் அனைவரும் அங்கு தானே இருப்பார்கள்? ஸ்கந்தகிரியைச் சென்று பாருங்கள். எத்தனை எத்தனை மேலோர்களின் திரு உருவ படிமங்கள் முழு அளவில் கொலுவமர்ந்திருக்கும் காட்சியைப் பார்க்கலாம். தரிசிக்கவும் செய்யலாம். நாமும் சொர்க்கத்துக்கு வந்துவிட்ட சுகத்தையும் ஆழ்ந்து சிந்தித்து அறியலாம். சாந்தானந்தா கற்பனையில் சிலைகள் வடிவங்கள் அமைவதுபோல வேறு எவருக்கும் சிலைகள் அமைவதில்லை.

ஸ்கந்தாஸ்ரம வேலைகள் இன்னும் எவ்வளவோ இருந்தாலும் இனி தடைபடாது. தாமதமும் ஏற்படாது. நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டேயிருக்கும். இந்த ஸ்கந்தாச்சிரமம் உருவாவதற்காகவே, இந்த மயன் சிருஷ்டி நடைபெற வேண்டியிருந்ததாலேயே அன்று சேந்தமங்கலத்தில், தத்தகிரியில் சாந்தானந்தர் வேலை தடை ஏற்படுத்தியது இறைவன் திருவுள்ளம் என்று நினைத்துப் பார்க்கும்போது ஒரு சுகம் ஏற்படுகிறது.

தோல்விகள் எல்லாம் தோல்விகள் அல்ல. துயரங்கள் எல்லாம் துயரங்கள் அல்ல. வேதனைகள் எல்லாம் வேதனைகள் அல்ல. வரப்போகும் சுபிக்ஷத்திற்கு, சுகத்திற்கு நம்மை தயார் செய்யும் வழிமுறைகள் என்பதை அறியலாம்.

### தத்தகிரி ஸ்கந்தன்

சாந்தானந்தர் உள்ளம் சதா "குருநாதா குருநாதா" என்று ஜபித்துக்கொண்டேயிருக்கும். நல்லது கெட்டது எது

கேட்டாலும், நல்லது கெட்டது எது நடந்தாலும் "குருநாதா" என்று அவரது உள்ளமும், உதடுகளும் கூறுவதை நேரில் அறியலாம்.

தத்தகிரியை, தன்னுடைய குருநாதர் அதிஷ்டானத்தை புதுமையும், பொலிவும் பெறச் செய்யவேண்டும் என்று சந்நியாசி செய்த சங்கல்பம் சும்மாவாகவா இருக்கும்?

ஆண்டி வேடமிட்ட ஸ்கந்தன் அவதூத தத்தாத்ரேயரிடம் உபதேசம்பெற்ற ஞானஸ்கந்தன் சாந்தானந்தரை தூண்டி, காலத்தை கனிய வைத்து தத்தகிரியிலே தனக்கு ஒரு ஆலயம் அமைக்க உத்தரவிட்டுவிட்டான்.

சேந்தமங்கலம் சந்நியாசி கரடு, அவதூத சுயம்ப்ரகாசர் தவம் செய்த ஞானபூமி, தத்தாத்ரேயர் திருக்கோயில் எழுந்து தத்தகிரியாகி, ஸ்ரீ சுயம்ப்ரகாச முனிவரின் அதிஷ்டானமாகி இருக்கும் இடம் இனி தத்தகிரி ஞான ஸ்கந்தன் திருக்கோயிலாக சிறந்து விளங்கப்போகிறது.

தத்தாத்ரேயரை குருவாகக்கொண்ட ஸ்கந்தனுக்கு, குருவின் பார்வையில் திருக்கோயில் அமைவது எத்துணை எத்துணை பொருத்தம். இன்னும் என்னென்ன அதிசயங்கள் அங்கு நிகழப்போகிறதோ யார் அறிவார்?

கலியுகத்தில் ஸ்கந்தனுக்கு மேல் ஒரு தெய்வம் இல்லை. ஸ்கந்தன் நாம ஜபம் கைமேல் பலன் தரவல்லது. கேட்டது கிடைக்கும், நினைப்பது நடக்கும். எண்ணியர் எண்ணியாங்கு எய்துவர். ஸ்கந்தன் நினைர்களைக் காப்பதற்கு திருவுளம் கொண்ட தெய்வம். முருகன், அழகன், வீரன், கருணையாளன், வரம் தரும் வள்ளல், ஞான செ ருபி

முருகனை ஒருகால் நினைத்தால் தன் இரு கால்களும் அடியாருக்கு அருளும் கருணமூர்த்தி. மயிலேறும் மாணிக்கம். ஆறுபடைவீடு கொண்ட அண்ணல். அடியார் நோய்

தீர்க்கும் மாமருந்து. நலிவு அகற்றும் நல்லாசான். தன்றே கொண்டு கனித்து நின்று கண்ணருள் பரப்பும் அருள்ஞானப் பழம். அன்பர்களுக்கு ஆனந்தம்தரும் தேன் ஸ்கந்தன்.

ஸ்கந்தன் அருள் பார்வையே அன்பர்களுக்குப் பஞ்சாமிர்தம். ஸ்கந்தனை நினைத்து அணியும் திருநீறு காம பலன் அத்தனையும் போக்கும். அஞ்சுபவர்க்கு அஞ்சேல், அஞ்சேலென ஆதரவு காட்டும் அருட்சுடர். வற்றாத ஞான கங்கை தத்தகிரி ஸ்கந்தன்.

தத்தகிரியில் குருவும் சீடர்களும் அமர்ந்த கோலாகலம். தரிசிக்க, தரிசிக்க எல்லா சங்கடங்களும் தீரும், தீரும். வாயினாற் பாடித் துதித்தால் போதும் மனத்தில் நினைத்துச் சிந்தித்தால்போதும். இதுவரை நாம் அறியாமல் செய்த பாப தோஷங்களும், இனி நாம் அறியாமல் செய்கின்ற பாப தோஷங்களும் தீயிலே பட்ட தூசினைப்போல் தீரும்.

அற்புதமாக அமைந்திருக்கும் தத்தகிரி ஸ்கந்தனை தரிசிக்க தமிழன்பர்களே! பக்தர்களே! ஆன்மீகப் பெரியோர்களே! வாருங்கள். வந்து தரிசித்து மனநிறைவுபெற்று வளமார்ந்த வாழ்வு பெறுவீர்களென அழைக்கின்றோம்.

தத்தகிரியிலே ஸ்ரீ அவதூத ஸ்வயம்ப்ரகாசரிடம் உபதேசப்பெற்ற சீடர்கள் துரியானந்த ஸ்வாமி, சங்கரானந்த ஸ்வாமி, நிஜாநந்த ஸ்வாமி, அபயாநந்த ஸ்வாமி, கிருஷ்ணாநந்த ஸ்வாமி, சாந்தானந்த ஸ்வாமி ஆகியோர், உபதேசம்பெற்ற துறவிகள். இல்லறத்தார் பலபேர் உபதேசம் பெற்றிருக்கிறார்கள். உபதேச ஒலி வெள்ளம் அங்கு இன்றும் உலவவே செய்யும் என்பதில் தடையில்லை.

இன்று தத்தகிரியின் தென்புறத்தில் ஸ்ரீதத்தகுடீரம் ஒன்று அமைத்து ஸ்வாமிகளின் சீடர் ஸ்ரீகிருஷ்ணாநந்த குரு

மகராஜ் இருந்துகொண்டு குரு கைங்கர்யம் செய்து வருகின்றார்கள்.

ஸ்ரீசாந்தானந்தர் உடையாப்பட்டியில் ஸ்கந்தாச்ர மத்தை எப்படி உருவாக்கினார்களோ அதனைப் போலவே தத்தகிரி ஸ்ரீஸ்கந்தன் ஆலயத்தை உருவாக்கி வருகிறார்கள்.

ஆத்ம ஞானிகள் தரிசனம் அவல வாழ்க்கைக்கு முற்றுப் புள்ளி வைத்து, ஆனந்த வாழ்க்கைக்கு வழிகாட்டும். ஸ்ரீஸ்கந்தகுரு தரிசனம் கவலையைப் போக்கும். ஸ்ரீதத்தகுரு தரிசனம் ஞானத்தை நமக்கு நல்கும். ஸ்ரீஸ்வயம் பிரகாசர் தரிசனம் நமக்குச் சுகவாழ்வைத் தரும்.

சுபம்.

---

# சேந்தமங்கலம்
# ஸ்ரீ அவதூத மஹா ஸ்வாமிகள்
# ஸ்ரீ தத்தாத்ரேய பகவான்,
# ஸ்ரீ தத்தகிரி முருகன்

உலகில் நமது பரத கண்டமானது மஹா புருஷர்களுடைய அவதார ஸ்தலமாகும். நமது நாட்டின் தென் திசையில் இருக்கும் தொண்டை நாட்டைப்பற்றி ஔவைப் பிராட்டியார் வியந்து பாடுமொரு பாட்டில்

வேழமுடைத்து மலை நாடு மேதக்க,
சோழவள நாடு சோறுடைத்துப்——பூமியாகோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோருடைத்து

என்றும் பாடியுள்ளதை நினைத்துப் பார்க்கும்போது திருவள்ளுவர், அருள் மொழிததேவர், பொய்யா மொழிப் புலவர், பரிமேலழகர் படிக்காசுப்புலவர், அந்தக வீரக் கவிராயர், பெருந்தேவனார், அப்பைய தீக்ஷிதர், ஸ்ரீராமானுஜர் சிதம்பர ஸ்வாமிகள், பட்டினத்தடிகள், அருணகிரிநாதர், சேக்கிழார், நமது நாடே வியந்து போற்றும் நடமாடும் காமாக்ஷியாக விளங்கிவரும் ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீசந்திரசேகரேந்த்ர ஸரஸ்வதி ஸ்வாமிகள் முதலிய அவதார புருஷர்களின் அவதார ஸ்தலமாகிய தொண்டை நாடடில் நமது ஸ்ரீமத் ஸத்குரு ஞானாநந்த ஸ்வாமிகளவர்களுடைய ஸ்ரீசதகுரு பகவானை ஸ்ரீமத் ஸ்வயம்ப்ரகாச ப்ரம்மேந்த்ர அவதூத ஸரஸ்வதி ஸ்வாமிகளான மஹாபுருஷரும். விழுப்புரத்துற்கு அருகில் உள்ள கல்பட்டு என்னும் கிராமத்தில் அவதாரம் செய்துள்ள மஹா ஞான சித்த புருஷருமாவர்.

உலகம் போற்றும் மஹா புருஷரான சேந்தமங்கலம் அவதூத ஸத்குரு பகவானை ஸ்ரீஸ்வயம்ப்ரகாச ஸத்குரு

ஸ்வாமிகள் அவர்கள் வித்வத் ஸந்யாஸ அவதூத பரம் பரைக்கு மூல காரண புருஷரான ஸ்ரீ தத்தாத்ரேய அவதூத ஸத்குரு பகவானுக்கு தமிழகத்திலேயே முதன் முதலாக சேந்தமங்கலத்தின் தெற்கில் ஸ்ரீ தத்தகிரிக் குன்றின்மேல் சிலா விக்ரஹ பிரதிஷ்டை செய்து வைத்தவர் ஆவார்கள். மும்மூர்த்திகளும் ஏக மூர்த்தியாக விளங்கும் மூர்த்தமே ஸ்ரீ தத்தாத்ரேய அவதூத பகவானவர். ஞான வைராக்யம் அனைத்துமே தமது திருவுருவமாக்கிக்கொண்டு காட்சி கொடுப்பவர் பகவான் ஸ்ரீ தத்தாத்ரேயர். இவருடைய அவதாரம் உலகில் ஞானமார்க்கத்தை நிலைநாட்டவே ஏற்பட்டதாகும். அத்வைதிகளின் ஞான ஆச்சார்ய வரிசையில் முதல்வராகத் திகழ்பவர் ஸ்ரீ தத்தாத்ரேய ஸத்குருநாதர். இவரே சாக்தத்திற்கும் முதற்பெரும் குருவு மாவார். பிரம்மா, விஷ்ணு, மஹேச்வரர் எனப்படும் மும் மூர்த்திகளும் அநசூயா தேவியின் தீர்த்தப்ரோக்ஷணத்தின் மஹாத்மியத்தினால் பச்சிளம் குழந்தைகளாகிவிட்டனர். அத்ரி மஹரிஷியானவர் மூன்று குழந்தைகளையும் ஒன்றாக வாரியணைத்தவுடன் மூன்று சிசுக்களும் ஒருருவாகி ஸ்ரீ தத்தாத்ரேய பகவானாகிக் காட்சிக் கொடுத்தார். கோரக்ஷநாதர், மத்ஸ்யேந்திரநாதர் போன்ற மஹா சித்தர்களின் முதற்குருவும் ஸ்ரீ தத்தாத்ரேயராவர். ஸ்ரீமத் பாகவதத்தில் ஆன்ம ஞானமடைவதற்கு பூமி, வாயு, ஆகாசம், ஜலம், அக்னி, சந்திரன், சூரியன், மாடப்புறா, மலைப்பாம்பு, சமுத்திரம், விளக்கு வெட்டும் பூச்சி, தேனீ, யானை, தேனெடுப்பவன், மான், மீன், தாஸி, குரரப்பக்ஷி, சிறுவன், குமாரி, அம்பைத் தொடுத்தவன், பாம்பு, சிலந்தி, பொன்வண்டு மேற்கண்ட 24 பேரிடமிருந்தும் ஞானத்தை அடைய உபாயங்களைத் தெரிந்து கொண்டதாக பகவான் ஸ்ரீ தத்தாத்ரேயர் யது மன்னருக்குக் கூறுகிறார்; துக்க நிவர்த்திக்கும், ஜனன மரண பயம் நீங்கவும் ஸ்ரீ தத்தாத்ரேய பகவானின் திருவருள் கடாக்ஷம் இருக்கவேண்டும்.

சேந்தமங்கலத்தில் ஸ்ரீதத்தகிரியிலும், புதுக்கோட்டை அதிஷ்டானத்திலும் ஸ்ரீதத்தாத்ரேய பகவானை ஸ்ரீஸ்வயம் ப்ரகாச ப்ரபமேந்த்ர அவதூத மஹா ஸ்வாமிகள் அவர்கள் தமது திருக்கரத்தினாலேயே பிரதிஷ்டைசெய்து தந்துள்ளார்கள் ஸ்ரீபகவான் தத்தாத்ரேயரை சிக்கெனப் பற்றிக் கொண்டு, வாழையடி வாழையாகப் பின்பற்றி வந்து கொண்டிருக்கும் பாரம்பர்யத்தைச் சேர்ந்தவரே சேந்தமங்கலம் அவதூத மஹா ஸ்வாமிகள் ஆவார். நமது ஸ்ரீஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களுக்கு ஞானோபதேசம் செய்த ஸ்ரீசேந்தமங்கலம் மஹா ஸ்வாமிகள் அவர்கள் உலகெலாம் உணர்ந்தோதற்கரியவனும் எல்லாம் வல்ல ஞானஸித்த புருஷருமாவர். சேந்தமங்கலம் ஸ்ரீதத்தாத்ரேய பகவானின் திருவடிக்குக் கீழே அவர்கள் அதிஷ்டானமாகியிருக்கிறார்.

முன்னைப் பழம்பொருட்டும் முன்னைப் பழம்பொருளான எல்லாம்வல்ல சிவபெருமானின் ஸ்வயம்ப்ரகாசமெனப்படும் தேஜஸே சிவ குமாரனான ஸ்ரீ ஞானஸ்கந்தன் எனப்படும் சுப்ரமண்ய ஸ்வாமியாவார்.

சிவனையும், சக்தியையும் பரமபொருளாகக் கொண்ட நாடு நமது பாரத நாடு.

நித்யமெனப்படும் பரம்பொருளான பிரம்மத்தை ஸ்வயம்ப்ரகாசம் எனப்படும் அழிவற்ற அருட்பெருஞ் ஜோதியை அகத்துள் ஆத்மாவாகவே சதாகாலமும் வைத்துக் கொண்டிருக்கும் பகுத்தறிவுள்ள உலக மக்கள் ஒவ்வொருவருமே முன்னைப் பழம்பொருட்டும் முன்னைப் பழம்பொருளான எல்லாம்வல்ல சிவஞான ஜோதிக் கடவுளை இம்மையில் ஞானபண்டிதனான சுப்ரமண்ய ஸ்வாமியை அனைவரும் தங்களது அகத்துள் உள்ள அழிவற்ற ஆத்மாவாகவே அறிந்துகொண்டு பேரின்பமெனப்படும் பிரம்மானந்தத்தை இம்மையில் அனுபவித்துய்ய வேண்டுமென்பதற்காவே எல்லாம்வல்ல சிவசக்தி எனப்படும் பரம்பொருள்

உலகில் நன்மக்களைப் பகுத்தறிவோடு சிருஷ்டி செய்து உள்ளான்.

சிவனுக்குள் மறைந்திருந்த ஞானசக்தியானது, கலி யுகத்தில் பிறந்துள்ள மக்கள் அனைவரும் கலி தோஷம் எனப் படும் கலி கல்மஷங்கள் பாவங்கள் மக்களைப் பற்றிக்கொள்ளா வண்ணம் நன்மக்களை ரக்ஷிப்பதற்காகவே சிவசக்தி எனப் படும் பரம்பொருள் தனக்குள் மறைத்துவைத்துக்கொண்டு இருந்த தமது ஞானசக்திகளை எல்லாம் ஞானபண்டித ஸ்வாமியென உலகம் போற்றும்படியான சுப்ரமண்யக் கடவுள் எனப்படும் சிவஞானப் பழமான முருகனை, ஸ்வயம் ப்ரகாச ஜோதிக் கடவுளை அனுக்ரகித்துள்ளார்.

உயிர் வர்க்கங்களை ஈடேற்றும் பொருட்டு சிவசக்தி எனப்படும் பரம்பொருளான கடவுள் உலகிலுள்ள ஒவ்வொரு உயிர்களுக்கும் உயிராகவும், அந்தர்யாமியாகவும (ஞான சக்தியாகவும்) இருந்துகொண்டு மக்கள் அனைவரையும் அக்ஞானத்திலிருந்து காத்து ரக்ஷித்து எல்லோரையுமே ஞானபண்டிதரூக ஆக்குவித்துவிடவேண்டும் என்கிற கருணை யினால் தமக்குள்ளிருந்த ஞானம் அனைத்தையும் ஒன்றுதிரட்டி ஞானஜோதி ஸ்வரூபம் எனப்படும் சுப்ரமண்ய ஸ்வாமி யாகவே கலியில் பிறந்துள்ள மக்களுக்கு, சிவசக்தி ஸ்வரூபம் எனப்படும பரபொருளான கடவுள் முருகனைக் கொடுத்து உள்ளதை நினைத்துப் பார்க்கும்போது கலியில் பிறந்த மக்கள் அனைவரும் புண்ய புருஷர்கள் என்றுதான் சொல்லவேண்டும்.

கடவுளை நிர்குணமாகவும், ஸகுணமாகவும் உபநிட தங்கள் கூறுகின்றன.

சகல கல்யாண குணங்கள் அனைத்தும் நிறைந்த கடவுளான சிவசக்தியெனப்படும் பரம்பொருள் கலியுகத்தில் பிறந்துள்ள நன்மக்கள் நலமொன்றையே கருதி சுத்த சைதன்யமான பரம்பொருள் எனப்படும் சுப்ரமண்ய ஸ்வாமியை உலகில் விசேஷமாக தமிழகத்தில் உள்ளவர்

களுக்காகவே தந்துள்ள சிவஞானப் பழமான முருகனை, புதுக்கோட்டை அதிஷ்டானத்திலும், சேலம் ஸ்ரீஸ்கந்தாசிரமத்திலும் இருந்துவரும் ஸ்ரீஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் தமக்கு ஞானோபதேசஞ்செய்து, தன்னைத் தடுத்தாட்கொண்டு ரக்ஷித்தருளி பரிபூரணமாக அனுக்ரஹித்துள்ள உலகெலாம் உணர்ந்தோதற்கரியவன் எல்லாம் வல்ல ஞானசித்த புருஷருமான தமது ஸ்ரீஞான ஸத்குருநாதர் எனப்படும் ஸ்ரீஸ்வயம்ப்ரகாச ப்ரம்மேந்த்ர அவதூத மஹா புருஷருடைய சமாதியில் (அதிஷ்டானத்தில்) உலகில் அத்வைத ஞானாசாரியார் அவர்களுடைய பாரம்பர்யத்திற்கே ஆதிமூல புருஷரான பகவான் ஸ்ரீதத்தாத்ரேய ஸத்குரு ஸ்வாமியினுடைய ஸன்னதியில் வருகிற தை-மீ 7உ (20—1—83) வியாழக்கிழமையன்று மக்கள் நலம் ஒன்றையே கருதி எல்லோரும் குறைவற்ற ஞானச் செல்வத்துடன் இன்புற்றிருந்து வரவேண்டுமென்கிற ஸத்ய சங்கல்பத்துடன் சிவசக்தி ஸ்வரூபமான, ஞானபண்டித ஸ்வாமியான ஸ்ரீதத்தகிரியில், ஸ்ரீதத்தகிரி முருகன் என்கிற திருப்பெயரோடு பிரதிஷ்டைசெய்து தமிழகத்திற்கு மேலும் உதவுவதை நினைத்துப் பார்க்கும்போது, தமிழகத்திற்கே (சேலம் ஜில்லா, நாமக்கல் தாலூகா, சேந்தமங்கலத்திற்கே) மேலும் மேலும திருவருள் பெருக்கெடுத்துள்ளதென்றுதான் சொல்லவேண்டும்.

"ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரம்
திருநாமம் பாடித் தெள்ளேணம் கொட்டாமோ"

என்று திருவாதவூரடிகள் கூறித் தெள்ளேணம் கொட்டிக் களிப்படைந்துள்ள பரிபூரண புருஷனை சிவசக்தி ஸ்வரூபமான பரஞ்சோதிக் கடவுள் எனப்படும் முருகனுக்கு எத்தனை எத்தனை நாமங்களோ இருப்பினும் தமிழகத்தில் முருகன் என்கிற திருப்பெயரையே மஹா வாக்கியம்போல் தமிழர்கள் ஏற்றுக் கொண்டுள்ளார்கள்.

முப்பாலுக்கும் அப்பாற்பட்ட முருகனை உலகில் தமிழகம் ஒன்றே உண்மையாக உணர்ந்துகொண்டு இன்றும் உறுதியாக உபாசித்து வருகிறது.

தன்னை முருகக் கடவுளின் திருவடித் தாமரையில் ஈடு படுத்திக்கொண்டு விடுவதில் உலகில் தமிழகமே முதலில் இருந்து வருகிறது. முருகனிடத்தில் ஆழ்ந்த பக்தியில் ஈடு பட்டுள்ள தமிழர்களை எண்ணிக்கையில் கொண்டுவர முடியாது.

அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்த அகிலாண்டகோடிப் பிரம்மாண்ட நாயகரான ஸ்ரீஸத்குருநாதனை சரணாகதி அடைவது ஒன்றே கலியில் மிகச்சிறந்த மார்க்கமாகும்.

எவன் தன்னை (தன் மனதை) ஸ்ரீ தண்டாயுதபாணியின் திருவடித் தாமரையில் முழுமனத்துடன் சமர்ப்பணம் (சரணாகதி) செய்துகொண்டு விடுகிறானே அவன் உயிர் உள்ள போதே உயிருள்ள நடமாடும் முருகக்கடவுள் ஆகிவிடுவான் என்பதை நன்மக்கள் மறந்துவிடக்கூடாது.

எல்லாம்வல்ல சிவசக்தி எனப்படும் பரசிவ ஜ்யோதி ஸ்வரூபமான ஸ்ரீஞானதண்டாயுதபாணிக் கடவுள் எனப்படும் பரம்பொருளையே நமது நாட்டு மக்கள் உறுதியாக சிக்கெனப் பற்றிக்கொண்டு உண்மையாக அடைக்கலம் புகுந்து முழு மனத்துடன் உபாஸித்து பேரின்பமடைந்துய்ய வேண்டும் என்பதற்காகவே ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள், துந்துபி-௟ தை-மீ 7உ அன்று ஸ்ரீ தத்தகிரி குன்றின்மேல் ஸ்ரீமத் பகவான் தத்தாத்ரேய ஸத்குருவான கடவுளின் பக்கத்திலேயே ஸ்ரீ ஞானபண்டித ஸ்வாமியைப் பிரதிஷ்டை செய்திருர்கள்.

நமது நாட்டில் முக்கியமாக நமது தமிழகத்தில் மேலும் ஒவ்வொரு ஆண்களிடத்திலும், தாய்மார்களிடத்திலும் ஒழுக்கமும் கடவுள் உபாஸனையும் உறுதியாக, உண்மையாக

பலமாக வேரூன்றி வளர்ந்தால்தான் நமது நாடு மேலும் மேலும் பெருமையடைந்து மக்கள் துன்பமின்றி இன்புற்று வாழ்ந்துவர முடியும்.

நமது தமிழகத்தில் மேலும் தெய்வக் கொள்கை பெருக் கெடுத்தால் தான் நல்லொழுக்கமும், ஜீவகாருண்யமும் உண்மையாக இருந்துவர முடியுமென்பதற்காகவே ஸ்ரீஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் நமது தமிழகத்தின் செந்தாமங்கலத்தில் ஸ்ரீதத்தகிரி முருகனை சிலா விக்ரஹமாக பிரதிஷ்டை செய்துகொடுத்து, பகுத்தறிவுள்ள மக்கள் அனைவருக்கும் ஒழுக்கம் உறுதியாக, உண்மையாக, நிலைபெற்று ஓங்குவதற்காகவே முருகன் எனப்படும் கடவுள், "ஒன்றென்றிரு, தெய்வம் உண்டென்றிரு" என்று பட்டினத்தடிகள் உபதேசத்தையும் தமிழகத்தில் உள்ள நன் மக்களுக்கு ஸ்ரீமத் சாந்தானந்த ஸத்குரு ஸ்வாமிகளவர்கள் மேலும் ஞாபகப்படுத்துவதாகவே நமக்குத் தோன்றுகிறது.

நமது தமிழகத்தில் சமய வாழ்வு (சத்சங்கம்) மேலும் மலரவேண்டுமென்பதற்காகவே ஸ்ரீமத் சாந்தானந்த ஸத்குரு ஸ்வாமிகளவர்கள் நமது நாட்டிற்குத் தொண்டு செய்து வருகிறார்கள்.

தெய்வத் தொண்டே தேசத் தொண்டென நம்பிக் கொண்டு இடைவிடாமல் நமது ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் ஒரு முப்பது வருஷங் களாகவே மாபெரும் மகத்தான தெய்வத் தொண்டினைச் செய்துவருவதாவது நமது தமிழகத்தின் பாக்கியமேயாகு மென்றுதான் சொல்லவேண்டும்.

நமது நாட்டின் நலமொன்றையே நினைத்தவண்ணம் ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் சிவ பரம் பொருளான ஸ்வயம்ப்ரகாச ஜோதி எனப்படும், அருட் பெருஞ்ஜோதிக் கடவுளான முருகனை, சிவபெருமானுக்கே

உபதேசித்த சிவஞான ஜோதியான ஸ்வாமிநாத ஸ்வாமியை ஸ்ரீஞானதண்டாயுதபாணியாகவே சிலையை வடித்து, ஸ்ரீமத் சாந்தானந்த ஸத்குரு ஸ்வாமிகளவர்கள் வருகிற தை-மீ 7வ நமக்குத் தருகிறார்கள்.

"நல்லவை செய்வேன்
அல்லவை தவிர்ப்பேன்"

என்பதே தமிழர்களின் ஸத்ய சங்கல்பமாகும்.

ஆதலால் நமது ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களுடைய நல்ல சங்கல்பத்தை நிறைவேற்றிட நாம் அனைவரும் விரதமிருப்போமாக.

நாம் அனைவரும் நற்செயல்களில் ஈடுபடவேண்டும் என்பதே ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்களின் நல்ல எண்ணமாகும்.

ஸ்ரீ ஸத்குரு பக்தியும், குருவாக்ய பரிபாலனமும்தான் நமது சமயம் மேலும் உண்மையாக வளர்வதற்கு உதவுவது ஆகும் என்பதையெல்லாம் நன்மக்கள் நன்கறிவார்கள்.

இம்மையில் நாம் எந்தச் செயலை மறந்தாலும் ஸ்ரீஸத்குரு நாதரையும், ஸ்ரீமத் குரு வாக்கையும் மறந்துவிடலாகாது. பிறவிப்பயன் ஸ்ரீ ஸத்குரு பக்தியும், ஸ்ரீ ஸத்குரு வாக்கிய பரிபாலனமுமேயாகும் என்பதை மேலும் பணிவன்புடன் வணக்கத்தோடு ஞாபகப்படுத்தலானேன்.

பிறவிப் பெருங்கடல் நீந்தும் பெருவாய்ப்புற்ற வாழ்க்கை ஒன்றே நல்லறிவுமிக்க நன்மக்களின் வாழ்க்கையாகும் என்பதை நன்மக்கள் மறந்துவிடக்கூடாது.

நம்மையெல்லாம் இவர்கள் நன்மக்கள் என்று நல்லறிவு மிக்க எல்லோருமே போற்றவேண்டும் என்பதற்காகவே நமக்கெல்லாம் ஸ்ரீ ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள்

ஞானபண்டித ஸ்வாமியெனப்படும் ஸ்ரீ தண்டாயுதபாணிக் கடவுளின் கைங்கா்யத்தைக் கொடுத்துள்ளார் என்றுதான் சொல்லவேண்டும்.

நல்ல மேலான மானிடப் பிறவியின் மகத்துவமெல்லாம் கடவுளைச் சத்தியமாக நம்பி அந்த எல்லாம்வல்ல ஞான பண்டித ஸ்வாமிகளே அடிமையாகி சரணமடைந்து இம்மையில் ஆர்த்த பிறவித்துயர்கெட திருமுருகனின் திரு நாமத்தை நாத்தழும்பேற இடைவிடாது ஓதி மகிழ்கின்ற வாழ்வுதான் நல்லறிவுமிக்க நன்மக்களின் வாழ்வாகும், குறிக்கோளும் ஆகும்.

மேற்கண்ட குறிக்கோள் ஈடேற வேண்டுமென்பதற்காகவே ஸ்ரீஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் நல்லதொரு புண்ணியப் பெருக்குடைய கைங்கர்யத்தை நமக்குக் கொடுத்துள்ளார்கள்.

பார்க்குமிடம் எங்குமொரு நீக்கமற நிறைந்திருக்கின்ற எல்லாம்வல்ல முருகக் கடவுளின் திருவருள் நமக்கெல்லாம் கிட்டுவதற்காக செய்து கொடுத்துள்ள சேந்தமங்கலம் கைங்கர்யத்தில் நாம் அனைவரும் முழுமனத்துடன் ஈடுபட்டு இம்மையில் குருவருளையும், திருவருளையும் பெற்று உய்வோமாக.



# அதிஷ்டானத்தில் நடைபெற்ற ஹோமங்கள்

31–5–1936 அதிஷ்டானம் மஹா கும்பாபிஷேகம், சேந்தமங்கலம் ஸ்ரீஸத்குரு ஸ்வயம்பரகாச ப்ரம்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகளவர்களால (நமது ஸ்ரீமத் சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களின் ஸத்குரு அவர்களால்) நடத்தப்பட்டது.

5–5–1956 அதிஷ்டானம் மஹா கும்பாபிஷேகம் புதுக்கோட்டை ஸ்ரீஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்களால் நடத்தப்பட்டது. தொடர்ந்து 48 நாட்கள் சண்டீ ஹோமம், கடைசிநாள் சதசண்டீ ஹோமமும் நடைபெற்றது.

15–5–1957 ஷோடசத்ரவ்ய ஸ்ரீவல்லபா கணபதி லக்ஷ ஹோமம் நடைபெற்றது.

20–5–1958 ஸ்ரீமஹா ருத்ர மஹா மந்த்ர ஜப ஹோமம் ஒரே நாளில் நடைபெற்றது.

10–5–1959 நவக்ரஹ லக்ஷ ஹோமம் ஒரே நாளில் நடைபெற்றது.

4–6–1960 ஸ்ரீமஹா கணபதி ஹோமம், நவக்ரஹ ஹோமம், புருஷ ஸூக்த ஹோமம், ஆவஹந்தி ஹோமம், ஸ்ரீஸூக்த ஹோமம், ஸ்ரீருத்ரைகாதசனி (சதருத்ர) ஹோமம், விசேஷமாக நடைபெற்றது.

6–6–1962 அதிஷ்டானம் மஹா கும்பாபிஷேகம் ஸ்ரீஜகத் ஜனனியான மாதா புவனேஸ்வரி சிலா விக்ரஹப் பிரதிஷ்டா மஹா கும்பாபிஷேகம் ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்களால் நடத்தப்பட்டது.

தொடர்ந்து 48 நாட்கள் நித்ய சண்டீ ஹோமமும் நடைபெற்றது.

28-5-1963 முதல் 2-6-1963 வரை ஸ்ரீமத் ஸத்குரு சாநதனந்த ஸவாமிகளவாகளால் தமிழகத்தில் விசேஷ பிரயோகத்துடன் ஸ்ரீ ஸஹஸ்ர சண்டீ மஹாயக்ஞம் வெகுவிமரிசையாக, ச்ரத்தா பக்தியுடன் முறைப்படி நடைபெற்றது.

22-5-1964 ஸ்ரீ ஸூக்த மந்த்ர ஸம்புடித ஸ்ரீவலலபா மஹாகணபதி லக்ஷ ஹோமம். தமிழகததில் ஒரே நாளில மக்கள் அனைவருடைய நலமொனறைபே கருதி முதல்தரமாக நடைபெற்றது.

5-6-1965 முதல் 8-6-1965 வரை தமிழகத்தில் இதுவரை எங்கும நடைபெறாத அளவில் உலக நலம் கருதி மஹததான சக்திகளை கொண்ட ஸ்ரீமாதா புவனேச்வரி மஹாமந்த்ர கோடி தில ஹோமம், மக்கள் அதிசயம் எனப் போற்றும்படி நடைபெறறது.

30-5-1966 ஸ்ரீ சக்ர பூர்ண மஹாமேரு ப்ரதிஷ்டை. தொடர்ந்து 48 நாடகள் நித்ய சண்டீ ஹோமம். கடைசி நாள் விசேஷ ஸ்ரீ சதசண்டீ ஹோமமும நடைபெற்றது.

24-2-1967 முதல் 3-6-1967 வரை 100 நாட்கள் ஸ்ரீ மாதா புவனேச்வரிதேவிக்கும், ஸ்ரீசக்ரபூர்ண மஹாமேரு விற்கும் ஒரு கோடி தருதாரி ஸஹிதமாக ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம அர்ச்சனைகள் நடைபெற்றது. கடைசி 10 நாடகளில் 10 லக்ஷம் (தச லக்ஷம்) ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தினல் ஹோமமும் ஸ்ரீமாதாவின திருவடி த்யானததுடன் பக்தி ச்ரத்தையாக, விதி வழுவாது, நன்கு வெகு சிறப்புடன் நடைபெற்றது.

[illegible]-1968 முதல் [illegible]-1968 வரை ஸ்ரீ மஹா ஸுதர்சன மஹா மந்த்ர லக்ஷ ஹோமமும், உலக நலம் கருதி, உறுதியாக நடைபெற்றது.

2?-5-1969 ஸ்ரீ சாந்தி துர்கா சூலினி மஹாமந்த்ர லக்ஷ ஹோமம்.

27-5-1969 முதல் சேலம் ஸ்ரீஸ்கந்தாச்ரமத்தில் ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் யஜுர் வேதபாடசாலையைத் துவக்கிவைத்து நடத்தி வருகிறார்கள்

17-5-1970 மக்களனைவருக்கும் லக்ஷ்மீ கடாக்ஷமுண்டாவதற்காகவே ஸ்ரீ மஹாலக்ஷ்மீ மஹா மந்த்ர லக்ஷ ஹோமம் வெகுவிமரிசையாக ஒரே நாளில் நடைபெற்றது.

8-2-1971 சேலம் ஸ்ரீஸ்கந்தாச்ரமத்தில் ஸ்ரீ அஷ்டா தசபுஜ மகாலக்ஷ்மீ துர்காதேவியையும், ஸ்ரீ ஞான ஸ்கந்தகுரு (தண்டபாணி) பிரதிஷ்டா மஹா கும்பாபிஷேகம் ஸ்ரீமத் ஸதகுரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்களால் ச்ரத்தா பக்தியுடன் சாஸ்திரோக்தமாகவும், வெகு விமரிசையாகவும் நடத்தப்பட்டது.

4-6-1971 முதல் 1-7-1971 வரை புதுக்கோட்டை அதிஷ்டானத்தில், தமிழகத்தில் முதல்தரமாக 28 நாட்கள் ஸ்ரீ சரபேஸ்வர மஹா மந்த்ர லக்ஷ ஹோமம் வெகுவிமரிசையாக உலக நலமொன்றையே நினைத்து, ஸங்கல்பம் செய்துகொண்டு செய்யப்பட்டது.

26-4-72—23-5-72 ஸ்ரீஅதர்வண பத்ரகாளி மஹா மந்த்ர லக்ஷ ஹோமம் 28 நாட்கள்.

12-5-73 முதல் 9-6-73 வரை எங்குமே நடைபெறாதளவு வெகு விமரிசையாக ஸ்ரீஉக்ர நருஸிம்ம மஹா மந்த்ர ராஜ லக்ஷத்ரய (3 லக்ஷம்) ஹோமம் 28 நாட்கள் அதிஷ்டானத்தில் அதிசயிக்கும்படி நடந்தது.

4–5–74 முதல் 31–5–1974 வரை எங்குமே நடைபெறாத, மஹா மஹிமைகள் நிறைந்த ஸ்ரீ அதர்வண ரிக்ஸம்புடித ஸ்ரீமஹா வாராஹி மஹா மந்த்ர லக்ஷ ஹோமத்தை 28 நாட்கள் அதிஷ்டானத்தில் ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் நடத்தினார்கள்.

31–5–1974 புதுக்கோட்டை அதிஷ்டானத்திலும், யஜுர் வேத பாடசாலையை ஸ்ரீஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் துவக்கி நடத்தி வருகின்றார்கள்.

1–9–1974 ஸ்ரீஸ்கந்தாச்ரமத்தில் எங்குமே இல்லாத 16 அடி உயரமுள்ள ஸ்ரீ பஞ்சமுக ஆஞ்சநேயர் சிலா விக்ரஹப் பிரதிஷ்டையை உலக நலம் கருதி, ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகள் செய்தார்கள்.

21–5–1975 புதுக்கோட்டையில் ஜகத் ஜனனியான ஸ்ரீமாதா புவனேச்வரி மூலமந்த்ர லக்ஷ ஹோமம் ஒரே நாளில் நடைபெற்றது.

5–9–1975 சேலம் ஸ்ரீஸ்கந்தாச்ரமத்தில் எங்குமில்லாத, மிகப்பெரிய 16 அடி உயரமுள்ள ஸ்ரீபஞ்சமுக விநாயகர் சிலா விக்ரஹப் பிரதிஷ்டை உலக நலம் கருதி ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகளவர்கள் செய்துள்ளார்கள்.

16–3–1976 சேலம் ஸ்ரீஸ்கந்தாச்ரமத்தில் உலகில் எங்குமே இல்லாத, மிகப்பெரிய 16 அடி உயரமுள்ள ஸ்ரீ தத்தாத்ரேய பகவானின் சிலா விக்ரஹப் ப்ரதிஷ்டை ஸ்ரீமத் சத்குரு ஸ்வாமிகள் உலக நலம் கருதி செய்துள்ளார்கள்.

11–5–1976 முதல் 7–6–1976 வரை புதுக்கோட்டையில் ஸ்ரீஜயதுர்கா, ஸ்ரீவனதுர்கா, மஹாமந்த்ர ஸம்புடித ஸ்ரீதுர்காஸப்தஸ்லோகீ மஹாமந்த்ர லக்ஷஹோமம் 28 நாட்கள் அதிசயமாக நடைபெற்றது.

30–3–77 ஸ்ரீ அதிஷ்டான ஜீர்ணோத்தாரண பணிகளை விரிவாகச் செய்து, ஸ்ரீமாதா புவனேஸ்வரி மஹா கும்பாபிஷேகத்தை ஸ்ரீஸத்குரு சாந்தானந்த ஸ்வாமி களவர்கள் வெகு விமரிசையாக, ச்ரத்தா பக்தியுடன் தமது ஸ்ரீஸத்குரு பகவானின் திருவருளை முன்னிட்டுக் கொண்டு நடத்திக் கொடுத்தார்கள்.

31–3–1977 முதல் 14–5–1977 வரை தொடர்ந்து 45 நாட்கள் மஹா சக்தி வாய்ந்த ஸ்ரீசூலினி துர்கா மஹாமந்த்ர ஸம்புடித ஸ்ரீமண்டல சண்டீ ஹோமத்தையும், மக்கள் நலமொன்றையே கருதி ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகளவர்கள் சத்ய சங்கல்பம் செய்துகொண்டு நடத்திக் கொடுத்துள்ளார்கள்.

21–4–78 முதல் 18–5–78 ஸ்ரீ சக்தி பஞ்சாக்ஷரீ மந்த்ர ஸம்புடித ஸ்ரீ புவனசக்தி மஹாமந்த்ர ஹோமம்.

9–5–79 முதல் 5–6–79 வரை குமாரோபநிஷத் மந்த்ர ஸம்புடித ஸ்ரீ சுப்ரமண்ய பஞ்சதசாக்ஷரீ மஹா மந்த்ர பஞ்ச லக்ஷ ஹோமம் சிறப்பாக நடைபெற்றது.

28–4–80 முதல் 25–5–80 வரை ஸ்ரீ புவனேச்வரி மஹா மந்த்ர ஸம்புடித ஸ்ரீ உக்ரப்ரத்யங்கிரா பரமேச்வரி மஹா மந்த்ர தச லக்ஷ ஹோமம் நடைபெற்றது

20–1–81 சேலம், ஸ்ரீ ஸ்கந்தாச்ரமத்தில் 13 அடி உயரத்தில் இரும்பன் சிலா விக்ரஹ பிரதிஷ்டை செய்யப்பட்டு உள்ளது. இந்தியாவிலுள்ள பகவான்களின் சிலைகளையும் பிரதிஷ்டை செய்ய ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

11–6–81 ஸ்ரீ அன்னபூர்ணா மஹா மந்த்ர லக்ஷ யக்ஞம் சிறப்பாக நடைபெற்றது.

5–5–82 முதல் 1–6–82 ஸ்ரீ தக்ஷிண காளிகாதேவி மஹா மந்த்ர லக்ஷத்ரய மஹா யக்ஞம் நடைபெற்றது.

பிரதி வருஷமும் ஸ்ரீஸ்கந்தாச்ரமத்தில் கார்த்திகை-மீ திருக் கார்த்திகை அன்று ஸ்கந்த ஜோதி தர்சனம் விசேஷமாக நடைபெறுகிறது. சேலம் ஸ்ரீஸ்கந்தாச்ர மத்தில் ஸ்ரீஅஷ்டாதசபுஜ மஹா லக்ஷ்மீ துர்கா தேவிக்கு நவராத்திரி விசேஷங்களும் ஸ்ரீஞானஸ்கந்த குருநாதரான தண்டபாணிக்கு, முருகப் பெருமானுக்குண்டான விசேஷங் களனைத்தும், ச்ரத்தா பக்தியுடன் ஸ்ரீஸ்கந்தாச்ரமத்தில் ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளவர்கள் நடத்தி வருகிறார்கள்.

புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் நவராத்திரியையும், நவராத்திரி முடிவில் விசேஷ சண்டீ ஹோமத்தையும் மேலும் மார்கழித் திருநாள் போன்ற விஸேஷங்களை யெல்லாம் ஸ்ரீமத் ஸத்குரு ஸ்வாமிகளவர்கள் உலக நலம் கருதி உறுதியாகச் செய்து வருகிறார்கள்.

வேதத்தை நம்பாதவனே நாஸ்திகனுவானென்றும், வேதத்தை நம்புகிறவனுக்கு மேலான அறம், பொருள், இன்பம் வீடுகள் இம்மையில் உறுதியாகக் கிட்டும் என்றும், வேத மதத்தை (வைதீக மதத்தைச்) சேர்ந்த ஹிந்துக்கள் அனைவரும் இந்தியாவின நலமொன்றையே கருதி, வாழையடி வாழையென வந்துள்ள நமது வேதத்தை விடாது பற்றிக் கொண்டு வாழ்ந்து வருவோமானுல், நமது முன்னோர்களாகிய மஹரிஷிகளின் நல்லாசி மேலும் உலக மக்கள் அனைவருக்கும் கிட்டி, உலகிலுள்ள எல்லோருமே குறையற்ற செல்வத்துடன் இன்புற்றிருந்து வரவேண்டும் என்பதற்காகவே, சேலம் ஸ்ரீ ஸ்கந்தாச்ரமத்திலும், புதுக்கோட்டை அதிஷ்டானத் திலும் வேத பாடசாலையை, ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள் நடத்தி வருகிறார்கள்.

வேத பாடசாலைக்கு நன்கொடை அனுப்புபவர்கள்:—

காரியதரிசி, அதிஷ்டானம், புதுக்கோட்டை, புதுக்கோட்டை ஜில்லா, தமிழ் நாடு என்கிற விலாசத் திற்கும்; காரியதரிசி, ஸ்ரீஸ்கந்தாச்ரமம், சேலம்-14 என்ற விலாசத்திற்கும் அனுப்பவேண்டுமாகக் கோருகிறோம்.

ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகளின்
அனுக்ரஹத்துடன்
பிரதி ஆங்கில மாதம் முதல் வெள்ளிக்கிழமை
வெளிவருகிறது

# ஸ்ரீ புவனேச்வரி விஜயம்

(மாத இதழ்)



வெளியிடுவோர் :

ஸ்ரீ புவனேச்வரி சாரிடீஸ் டிரஸ்ட்,
ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரம்மேந்திர
ஸரஸ்வத்யவதூத ஸ்வாமிகள் அதிஷ்டானம்
புதுக்கோட்டை—622 001

தனிப்ரதி 1-25

ஆண்டு சந்தா 14-00 பரம்பரை சந்தா 251-00
ஆயுள் சந்தா 151-00 போஷகர் 1001-00

மலேயா } ஆண்டு சந்தா { Sea Mail 40-00
பர்மா } ஆண்டு சந்தா { Air Mail 70-00

ஸ்ரீ ஸத்குரு ஸதாசிவ ப்ரம்மேந்த்ர ஸரஸ்வத்யவதூத
ஸ்வாமிகள் அதிஷ்டானம், புதுக்கோட்டை-622 001

# ஸ்ரீபுவனேச்வரீ தத்வப்ரகாசம்

(ஓர் ஆராய்ச்சி நூல்)

அச்சிலிருக்கிறது, சீக்கிரம் வெளியாகும்.



இயற்றியவர்:

திருவெண்காடு ந்யாய-மீமாம்ஸா-சிரோமணி
T. K. ருத்ருஸ்வாமி சாஸ்திரிகள்

வெளியீடு:

ஸ்ரீ புவனேச்வரீ சாரிடீஸ் ட்ரஸ்ட்,
அதிஷ்டானம், புதுக்கோட்டை-622 001.



புதுக்கோட்டை அதிஷ்டானத்தில் 30—3—77ல்
ஸ்ரீமாதா புவனேச்வரீ தேவியின் ஸந்நிதி விமானத்திற்கு
ஸ்ரீமத் ஸத்குரு சாந்தானந்த ஸ்வாமிகள் அவர்கள்
மஹாகும்பாபிஷேகம் செய்யும் காட்சி.